ஸ்ரீ:

பல வித்வான்களின் ஸ்ரீஸூக்திகளையும்

திருவுருவப் படங்களையுங் கொண்ட

# மெய்ப்பொருள் வாழ்ச்சி

ஸ்ரீமான் உபயபாஷாப்ரவீண பண்டித

புரிசை, பரவஸ்து வரதாசாரியரால்

சேகரிக்கப்பட்டு

சென்னை கணேச அச்சுக்கூடத்தில் அச்சிட்டு

வெளியிடப்பட்டது.

கிடைக்குமிடம்

P. R. வரதாசாரியர், 15, துங்கசாலைத் தெரு,

மதராஸ்—3.

25—10—1950

விலை அணா 8.




உபயபாஷாப்ரவீண, பண்டித.
புரிசை பரவஸ்து, வரதாசாரியர்.
(15, தங்கசாலை வீதி, மதராஸ்.)

மெய்ப் பொருள் வாழ்ச்சி.

# முகவுரை

(புரிசை பரவஸ்து வரதாசாரியர்)

விவாத மென்னில் வெறுத்துப் பலகாதமோடு மவர்களில் அடியேனும் ஒருவன். விவாத பரங்களான புத்தகங்களைப் படிப்பதில் அடியேனுக்கு மனவெறுப்பு அதிகமாதலால் அச்செயலையும் இயன்றவரை விலக்கி வருபவனடியேன். இதனால், விவாதம் நேர்ந்தபோது எழும் வினாக்களுக்கு விடையிறுக்க அஞ்சி யொதுங்கினேனல்லேன் என்பதையும் இங்கு விக்ஞாபித்துக்கொள்ள விரும்புகிறேன். மேல் நாட்டுக் கவியரசரான William Shakespeare (ஷேக்ஸ்பியர்) தமது Hamlet எனும் நாடகத்தில் " Beware of entrance into a quarrel: but being in bear it that the opposed may beware of thee" எனக் கூறியுள்ளார்; "விவாதங்களில் இறங்குவதில் எச்சரிக்கையாயிரு: ஆனால் இறங்கியபின் எதிரியஞ்சவுரப்பு" என்பதே இதன் கருத்தாம். அவ்வாறாக விவாதத்துக்குக் காரணமாக நிற்பவரின் மனம் புண்படப் பதில் விடுக்க நேருமாயின் அது ஸ்ரீவைஷ்ணவ ஸ்வரூபத்துக்கு முரண்படுமென எண்ணி விவாத மென்னில் விலகி நிற்பேனானேன்.

சமீபத்தில், அடியேனிடம் அன்பு பூண்ட பெரியார் ஒருவர் "முத்தம் சண்ணம் மொட்டுஎன்னும் சொற்பொருள் விளக்கம்" என மகுடமிட்டுள்ள சிறு புத்தகமொன்றைக் கொடுத்துப் புன்னகை பூத்தார். அவரது புன்னகையின் இரகசியம் அடியேன் அநுபவத்தில் நன்கறிந்தவனாதலின் ஸ்வாமி ! பங்கீடு (Ration) காலமாதலால் அடியேன் தோள்களில் திண்மையில்லை. ஆகவே தாங்களே விஷயத்தை கிருபை செய்து கூறிவிட வேண்டுமென்று பிரார்த்தித்தேன். "இச்சிறு நூலை நீ அவசியம் ஆராய்ச்சி செய்யவேண்டும்;

பெரியாழ்வார் ஸ்ரீஸூக்திகளில் மூன்று சொற்களைக் குறித்துப் பொருள் விசாரம் செய்கிறது இச்சிறு நூல். விவாத விஷயமாயிருந்தாலும் சொற்பொருளாராய்ச்சி, அதிலும் ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளில் ஆராய்ச்சியாதலால் அவச்யம் நீ இதில் கண் செலுத்த வேண்டும். எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தன்றோ அறிவு? இதில் உனது ஆராய்ச்சியை ஒரு சிறிது வெளியிட்டேயாகவேண்டும் எனச் சொல்லிப் போந்தார் அப்பெரியார்.

அப் பெரியாரின் நியமனம் புறக்கணிக்கமாட்டாது அச்சிறுநூலின்—நூலென்ப தெங்ஙனம்? நக்கீரனார் நூலின்னதென்ப வெனும் தலைப்பின் கீழ் வரையறுத்துள்ள இலக்கணங்களுள் ஒன்றேனும் அமைந்திலதே.—அப்புத்தகத்தின் 34 பக்கங்களையும் படித்தேன்; விஷயங்களும் வசவுகளும் கலசிக்கலசியிருந்தமையால் ஒன்றை நீக்கி மற்றொன்றைப் பார்ப்பதும் அசாத்தியமாயது. ஆகவே எல்லாவற்றையும் காண நேர்ந்தது.

அந்தச் சிறு புத்தகத்தில் கூறியுள்ள விஷயங்களை மாத்திரம் எழுதவேண்டுமாயின் முப்பதை நீக்கி எஞ்சிய நான்கு பக்கங்களில் முடித்து விடலாம். அதுவும் மிகை படுத்திக் கூறியதே. இரண்டு பக்கங்களிலேயே அடக்கி விடலாம். எழுதினவற்றையே திருப்பித் திருப்பிப் பலகால் எழுதி ஏடுகளை நிரப்புவதும், விஷய விசாரத்துக்குச் சம்பந்தமில்லாத நிந்தை மொழிகளை வாரி நிறைத்திருப்பதும் படிக்குங்கால் அருவருப்பை யுண்டாக்கியது. எனினும் ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளின் சொற் பொருளாராய்ச்சியாதலால் விஷயம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு மீண்டும் படித்தேன்.

புத்தகத்தின் ஆரம்பத்திலேயே "திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை என்னும் நவீனவுரைக்கு மறுப்பாக" என்னும் சொற்றொடரைக் கண்டு துணுக்குற்றேன். திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையையும் அவ்வருமந்த தீபிகையுரையை அருளிச்செய்த காஞ்சீபுரம் மஹாவித்வான் அண்ணங்கரா

சார்ய ஸ்வாமியையும் இகழ்ந்து அபசாரப்படுபவர் கூட்டத் தடியாருள் இப்புத்தகத்தின் ஆசிரியரும் ஒருவரோ வென்று நினைக்கலானேன்; மேலும் மேலும் படிக்க இந்நினைவே ஊர் ஜிதமாயிற்று. அபசாரம் ஸ்வாமியோடு மாத்திரம் நின்ற பாடில்லை. தமிழறிஞனென்றும் தமிழரசு என்றும் மார்பு தட்டித் திரியும் பலர்க்கும் அடிப்படையான தமிழறிவை யூட்டிய உரையாசிரியரான திருவல்லிக்கேணி ஸ்ரீ வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி, திருக்குடந்தை இளைய வில்லி. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி, திருப்பதி, உத்தமூர் வீரராகவாசாரியர் ஸ்வாமி முதலிய மகானுபாவர்களையும் குறை கூறியிருக்கிறது. இப்புத்தகத்தின் சொல்லம்புகள் மேலும் மைசூர்வரை சென்று அங்கு உத்தமாசிரமியாய், மடாதிபதியாய், ஜகத் விக்கியாதராக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் பரகால ஸ்வாமிகளிடத்திலும் சரணமடைந்திருக் கின்றன. சுருங்கக் கூறுமிடத்து காஞ்சீபுரம், ஸ்ரீ. ஸ்வாமி யிடத்தில் மதிப்பு வைத்திருப்போர் யாவரையும் இகழ்ந்து பேசவும், அந்த ஸ்வாமியிடம் எதிரப்பு கொந்து அபசாரப் படுபவர்களைப் புகழ்ந்து போற்றவும் திடமான விரதம் கொண்டு இச்சிறுபுத்தகத்தை எழுதியுள்ளார் இதன் ஆசிரி யர் என்பது வெள்ளிடை மலை.

நிந்தை அகந்தையால் ஏற்படுவது. விளக்கப்பட வேண்டிய விஷயமாவது நேர்மையான வழியில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளதாவென நோக்கிடில் பூர்வாசாரியர்கள் ஐயந்திரிபறக் காட்டியுள்ள இடங்களிலும் வீணான சந்தே கங்களை யுண்டாக்கி ஆசார்யர்கள் திருவுள்ளத்துக்குச் சிறி தும் உகப்பல்லாத அர்த்தமே எழுதப்பட்டுள்ளது.

இப்புத்தகத்தை எழுதியவர் ஈச்சம்பாடி ஸ்ரீநிவாஸ ராகவாசாரியர் ஸ்வாமி யென்பது புத்தகத்தின் முகப்பி லிருந்து தெளிவாகிறது. அந்த ஸ்வாமி நேர்மையும் பிரா மாணிகமுமான வழியில் செல்லாமையையும் அவர்க்கு பூர் வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளில் ப்ரதிபத்தி யில்லாமையை யும் நடு நிலைமையிலுள்ளார்க்கு ஒரு சிறிது காட்டவேண் டியது அவசியமாகிறது; காட்டுகின்றேன்.

இப்புத்தகத்தின் 20, 21ஆம் பக்கங்களில் திருவாய் மொழிப்பிள்ளை உரை வாக்கியங்களையும் மணவாள மாமுனிகளின் உரை வாக்கியங்களையும் எடுத்துக் காட்டுகிறார். இங்கு அவற்றில் இல்லாத வாக்கியங்களை— தாமே கற்பனை செய்த பல வாக்கியங்களை—அப்பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளில் சேர்த்து நுழைத்துப் பதிப்பித்துள்ளா ரென்பதை நான்கிடங்களில் காணலாம்:-

(1) "முத்தமிருந்தவா காணீரே" யென்றவிடத்தில் திருவாய்மொழிப் பிள்ளை யுரை யென்று மகுடமிட்டு உண்மையாக அங்குள்ள வாக்கிய மொன்றைக் காட்டிவிட்டு உடனே "சண்ணம் என்பது நுண்மை யென்னும் பொருளைத் தருவது; அஃது இங்கு இடையைக் குறித்தது" என்றும் திருவாய் மொழிப்பிள்ளை சாதித்திருப்பதாக எழுதியுள்ளார். இதன் உண்மை கண்டறியலாம். சண்ணம் எனும் சொல்லின் பொருள் மிக சாமானியமான அகராதியிலும் கண்டு கொள்வது.

(2) (பக்கம் 21) "மருங்குமிருந்தவா காணீரே" என்ற விடத்துத் திருவாய் மொழிப்பிள்ளையுரை வாக்கியங்களைக் காட்டுவதாக மகுடமிட்டு எழுதிவரும் வாக்கியங்களின் இடையே "திருவரைக்குமேலான திருமருங்குலை யநுபவிக்கிறார்" என்றுள்ள வாக்கியத்தை "திருவரைக்கு மேலான நாபிக்குக் கீழும் இடைக்கு மேற்பக்கமுமான திருமருங்குலை யநுபவிக்கிறார்" என்று தம் சொந்த வார்த்தைகளையும் சேர்த்து வளர்த்தி பூர்வாசார்ய வாக்கியமாகக் காட்டியிருக்கிறார்.

(3) (பக்கம் 21) "சிறுச் சண்ணம் துள்ளஞ் சோர" என்றவிடத்துத் திருவாய் மொழிப்பிள்ளையுரை வாசகங்களை எடுத்துக் காட்டுகையில் "சண்ண நீர்—திருப்பாதமுது; துள்ளம்—துளி" என்று தமது வாக்கியத்தையும் சேர்த்து பூர்வாசார்ய வாக்கியமாகக் காட்டியுள்ளார்.

(4) ஷை இடத்திலே மணவாள மாமுனிகளின் உரை வாக்கியங்களைக் காட்டுகையில் "சண்ணம்—திருவடி; துள்

ளம்-திருப்பாதத்தூளி என்பதும் உண்டு'' என்று தமது சொந்தமான வாக்கியத்தை மணவாள மாமுனிகள் அருளிச் செய்திருப்பதாகக் காட்டியுள்ளார்- இந்த விநோதங்களை யாவரும் அவசியம் காணவேணும்.

பூர்வாசார்யர்களின் பங்க்திகளை உலகுக்குப் பிரமாண மாக எடுத்துக் காட்டுமவர் தம் வார்த்தைகளையும் அவற்றின் நடுவண் நுழைத்து அவையாவும் பூர்வாசார்ய வாக்கிய மென் று பாமரர்கள் பிரமிக்கும்படி காட்டுவது பிராமாணிகர் செய் யும் செயலன்றே !

இச்சிறு புத்தகத்தின் ஆசிரியர், நேர்மையும்பிராமாணி கமுமான முறையில் செல்லாமையை மேற்சொன்ன நான்கு விஷயங்களினாலும் நிரூபித்துள்ளேன். இனி அவருக்கு நமது பூர்வாசார்யர்களின் ஸ்ரீ ஸூக்திகளில் பிரதிபத்தியில் லாமையை நிரூபணம் செய்ய முற்படுகிறேன்.

புத்தகத்தின் முடிவில் (பக்கம் 34) 'சிறுச் சண்ணம் துள்ளஞ் சோர' என்ற சொற்றொடர்க்கு பூர்வாசார்ய வியாக் கியான மொன்றிலும் இல்லாத பொருளைக் காட்டினதுமன் றி, ஆழ்வார் வாக்கில் வந்த பாடம் வேறென்றும், மணவாள மாமுனிகள் தப்பான பாடத்தை யேற்று உரை செய்து விட் டாரென்றும் காட்டப் புகுந்து "சரண் நைந்து உள்ளஞ் சோர'' என்று ஆதிகாலத்தில் பாடமிருந்து அப்பாடம் பிற் பட்ட காலத்தில் "சண்ணந் துள்ளஞ் சோர'' எனப் பிழை பெற்றதென்று எண்ணவும் இடமுண்டு'' என்று எழுதப் பட்டுள்ளது. பிழைப்பாடங்களைப் பூர்வாசார்யர்களே கொண்டு விட்டார்களென்று கூறி தப்புப்பிரசாரம் செய் யும் நமது ஸம்பிரதாய விரோதிகளோடு உண்டான நட்பி னால் அவர்களது மாயப் பேச்சில் நம்பிக்கைவைத்தல்லவா இப்படி எழுதப் படுகிறது ?

தெய்வப் புலமை பெற்ற புலவோர் பலரும் அவரவர் அநுபவித்த ஆனந்தத்தை அருட்பாக்களில் அருளிச் செய்துள்ளார்கள். பின்புள்ளார் பரிகசிக்கும் பான்மை யுடைய சொல்லிது, புகழத்தக்க சொல்லிது என்று

பாகுபாடு படுத்தி இயற்றியவரல்லரே! ஆக அவர்களது வாக்கைத் "தெய்வ வாக்கு" எனப் பலரும் போற்றி உவந்து வந்துள்ளனர். தற்காலத்தில் அவற்றில் சில வாக்குகளைப் பழித்து சிலரசங்களும் வெளிவந்துலாவுகின்றன.

ஆழ்வார் ஆசார்யர்கள் ஸ்ரீஸூக்திகளில் பாடப் பிறழ்வுகள் கூறிவந்தவர் ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸ முதலியாரெனும் மகாநுபாவர். அவருடைய மனப் பிராந்திக்குத் தக்க ஔஷதமாக "நான் கண்ட நல்லது" எனும் சிறு நூல் வெளி வந்து உலகறிய நிற்கிறது. அதையொட்டி வெளிவந்த மதிப்புரை மாலையும் உலகம்மதிக்க நின்றது.

நமது பூர்வாசார்யர்களின் வியாக்கியான நடையைக் கருவேப்பிலை விற்கும் குறத்திகளின் பேச்சு நடை யென்றும் மற்றும் பலபல வகையாகவும் கூச்சமும் அச்சமுமின்றி இழித்துக் கூறியுள்ள ஒரு முதலியாருடைய கூற்றை யாதரித்து அநுவாதம் செய்வதும் அவரைக் 'கலைஞர்-ப்ராமாணிகர்' என்று (பக்கம் 18-ல்) போற்றுவதும் இச்சிறு புத்தகத்தின் ஆசிரியரான ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிக்கு நமது பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீ ஸூக்திகளில் ப்ரதிபத்தியின் கனத்தை நன்கு விளக்குமன்றோ?

ஆழ்வார்கள் வாக்கில் புகுந்து புறப்பட்ட சில சொற்களை இவர் விளக்க வந்தவராயின் பூர்வாசார்ய வியாக்கியானங்களை யநுசரித்துப் பொருள் விவரித்தல் நேர்மையேயன்றி, நவீன உரைகாரர்களின் யோக்யதா யோக்யதைகளை விமர்சித்து வருதல் அழகிதோ? புத்தகத்தின் பக்கங்களை நிரப்புவதற்காக இன்னாருக்கு வயது 60, மற்றவருக்கு வயது 68; அவர் யோக்யதாம்சங்கள் இன்னவை, மற்றவர் குறைபாடுகள் இன்னவையென்று பல வம்பு வீண் பேச்சுகளைக் கொட்டியளப்பதோ பண்டிதர் செயல்? பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளை உள்ளபடி எடுத்துக்காட்டாது தம்முடைய கற்பனைக் குதிரையைத் தட்டிவிட்டு ஒன்றோடொன்று பிசிறி வெளியிடும்போதே இவர் நேர்வழியை விட்டு விலகியவ

ரென்பது எவர்க்கும் கையிலங்கு நெல்லிக்கனியாகுமாத லால் இவ்வளவோடு நிற்பதே நன்றாம்.

கலகம் பிறந்தால் நியாயம் பிறக்குமென்பதும் உலக வழக்கன்றோ? ஆகவே ஆழ்வார் திருவாக்கில் திருவவதரித்த அந்த முச்சொற்களுக்குப் பொருள் விளக்கம்வேண்டி விழைந்து நின்றேன். ஸ்ரீ ஸூக்திகளின் மெய்ப்பொருள் பெறவேண்டில் செல்கதியாது? காஞ்சீபுரத்தில் நமது அத்ருஷ்டவசமாகத் திருவவதரித்து ஸம்ப்ரதாய ஸேவை செய்து வரும் உபயவேதாந்த மஹாவித்வான் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஸந்நிதியில் அடியேன் இவ்விஷயமாய்ச் செய்துகொண்ட ப்ரார்த்தனை ஒன்றிரண்டு நாழிகையில் நிறைவேறியது.

பிரதிவாதி பயங்கரமெனும் தனிப்பெரும்புகழ் பெற்ற மரபில் உதித்த ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி மெய்ப்பொருள்களை விளக்கி வாதிகளின் வாயை மூடச் செய்யும் விஷயத்தில் மிகுந்த சௌலப்யமும் சாமர்த்தியமும் உடையவர். அடியேனுடைய ப்ரார்த்தனையின் பயனாக அவதரித்த "முத்தம் சண்ணம் மொட்டு மெய்ப்பொருள்" எனும் மகுடத்தினால் வெளியிட்டிருக்குமதில் ஸ்வாமி ஒருவருடைய ஆக்ஷேபங்களுக்கு விடை கூறுவதாகக் காட்டிக் கொள்ளாமலே உண்மைப் பொருள்களை உலகெலாம் போற்றப் பூப்பறித்தாற்போல் எழுதியிருக்குமழகு ப்ராமாணிக பண்டிதர்கள் யாவரும் பாராட்டத் தக்கது. அதில் காணப்படும் விசேஷார்த்தங்கள் வெளிவருவதற்கு ஈச்சம்பாடி ஸ்வாமி ஒருவாறு காரணபூதராகின்றமையால் அவரைப் போற்றுவதே நமக்குக் கருமமென்று திண்ணமாக வெண்ணுகிறேன்.

சில வருஷங்களாக ஷை மஹாவித்வான் ஸ்வாமியின் உபந்யாஸ கோஷ்டிகளில் தவறாது அந்வயிக்கும் பாக்கியம் அடியேனுக்கு லபித்திருக்கிறது. அவரோடு நெருங்கிப் பழகும் பேறும் அவ்வப்போது அடியேனுக்கு நேரும். உபய வேதாந்த நூல்களிலும் பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்

துக்கு அணுவளவும் முரண்பாடின்றிப் பிரமாணங்களையும் உபபத்திகளையும் மிகப் பொருத்தமாகக் காட்டி கேட்போர் அனைவரையும் ஆனந்தக் கடலில் ஆழ்த்தும் தனிப் பெரும் சக்தி அந்த ஸ்வாமி யொருவர்க்கே அஸாதாரணமென்பதை அடியேன் மாத்திரமன்று, உலகெலாம் உள்ளமுருகியுரைக்கும். அப்படிப்பட்ட மஹாபுருஷரை—ஆசார்ய சிரேஷ்டரை—உபந்யாஸ கேஸரியை—ஸம்ப்ரதாய சிகரத்தை சாரதாபீடமோ? கல்விக் களஞ்சியமோ? என்றெல்லாம் அதிசயித்து அடிபணிவது போக மசகப்ராயர்களான சிலர் அழுக்காறு காரணமாக எவ்வளவு பழித்துப்பேசி எழுதினும் அவையாவும் இரவியின் மீது உமிழ்வதோடொக்குமென்பதில் ஐயப்பாடுளதோ?

விவாத புத்தகத்தின் ஆசிரியரான ஸ்ரீ ஈச்சம்பாடி ஸ்வாமி தமது புத்தகத்தின் முடிவில் அறுபதின்மர்கட்கு மேற்பட்ட அறிஞர்கள் பெரியோர்கள் அப்புத்தகம் வெளியிடுமாறு தம்மிடம் தெரிவித்துக்கொண்டதாக எழுதியுள்ளார். இப்படிப்பட்ட ஆசார்ய ஸ்ரீ ஸூக்தி நிந்தனையை யாதரித்து பேரறிஞர் ஒருவரும் பிரார்த்தித்திருக்கமாட்டாரென்பது திண்ணம். துரியோதன சிசுபால தாயாதிகளான தர்ம விரோதிகள் ஸகரபுத்திரர்கட்கு மேற்பட்ட எண்ணிக்கையினர் அந்த ஸ்வாமியைக் கனவில் வந்து பிரார்த்தித்திருக்கலாம். உண்மையாயின் அவரது புத்தகத்தில் வெளியிட்டுள்ள ஒரு அம்சத்தையாவது ஆமோதிக்கும் ஸ்ரீ வைஷ்ணவர் ஒருவராவது உளரேல் அவருடைய திருநாமத்தையும் யோக்யதையையும் முழுவிலாசத்துடன் வெளியிடட்டும்.

அடியேனுடைய உருவப் படத்தை இந்தச் சிறு கட்டுரையுடன் வெளியிட்டுக் கொள்வது டம்பார்த்தமாகவல்ல: விளம்பரார்த்தமாகவுமல்ல-அடியேனுக்குத் தோன்றினவற்றைப் புனைபெயருடனோ அநாமதேயமாகவோ வெளியிடாமல் அச்சமின்றிப் பலருமறிய அடியேனைக் காட்டித் தெரிவித்துக்கொண்டபடி. "நீசனேன், நிறைவொன்றுமிலேன்" என்றபடி அறிவில் மிகச்சிறியேன் அடியேன். ஆயினும்

"யச:காயேந ஜீவதி" என்றபடி எஞ்ஞான்றும் புகழ்த்திரு மேனியோடு திகழும் திருப்பதி புரிசை வித்வதக்ரேஸர. ஸ்ரீரங்காசார்யர் ஸ்வாமியின் திருவருளுக்கு இலக்காகப் பெற்ற பெரும் பாக்யத்தினால் ஸ்ரீ ஸூக்திகளிலும் அர்த்த விசேஷங்களிலும் நன்மை தீமைகளைப் பகுத்துணரும் திறமை பெற்றிருப்பதாகச் செருக்குடைமையை ஒளியாது விளம்ப முன் வருகின்றேன்.

தென் மொழியறிவிலும் வடமொழியறிவிலும் தலைசிறந்த பல பல மஹான்களாலும் இதர ஸம்ப்ரதாய க்ரந்தாபிமாநிகளாலும் அன்றும் இன்றும் என்றும் உச்சிமேல் வைத்து மெச்சப்பட நம் ஸ்வாமி யருளியுள்ள திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை யுரையைத் தமிழ் நாற்ற மறியாதார் பழிப்பதோடு புகழ்வதோடு ஒருவாசியில்லை யென்பர் பெரியோர்.

# விசேஷித்தொரு விண்ணப்பம்

கீழே நாம் விவரித்தவண்ணம் காஞ்சீபுரம் ஸ்ரீ சீனிவாச முதலியாரென்பவர் சென்ற ஆண்டில் ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களையும் அவற்றின் பூர்வாசார்ய வியாக்கியானங்களையும் ஆராயப் புகுந்து ஆதியோடந்தமாக தூஷணைகளே நிரம்பிய வொரு புத்தகத்தை வெளியிட்டிருந்தார். அந்த தூஷணைகள் உபய சம்பிரதாயத்து ஆசாரியர்களையும் பற்றியவை. ஸ்ரீராமாநுஜருடைய நேர் சிஷ்யரான திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலிய ஸகல பூருவாசாரியர்களையும் எல்லை கடந்து பழித்து எழுதப்பட்ட அப்புத்தகத்தை ஸ்ரீ வைஷ்ணவ பண்டிதர்கள் யாவருமே கண்டிக்கவேண்டிய கடமையிருந்தும் ஒருவரும் அதில் மனம் செலுத்தவில்லை. ஆழ்வார்களின் திருவாக்கில் வந்த பாடங்களைப் பூருவாசாரியர்கள் பிறழ்

வாகவே கொண்டு உரை செய்துவிட்டார்களென்றும், உண்மையான பொருள் எழுதப்படாமல் போலிப் பொருளே எழுதப்பட்டு விட்டதென்றும், அவர்களின் உரைநடையும் மிக மிக ஆபாஸமான தென்றும் இப்படி கைபோனபடி யெல்லாம் எழுதி அச்சிட்ட அப்புத்தகத் தைச் சில ஸ்ரீ வைஷ்ணவர்களுங்கூட தலையால் சுமந்து திரி யத் தொடங்கினார்கள். அதற்கு என்ன காரணமென்னில், அப்புத்தகத்தில் பூருவாசாரிய நிந்தனைகளோடு ஸ்ரீமத் அண்ணங்கரா சார்ய ஸ்வாமிகளைப் பற்றின நிந்தனைகளும் விசேஷமாக இருந்தபடியால் அதில் பரம குதூகலமும் பரம திருப்தியுங் கொண்டதுவே காரணம்.

அப்படிப்பட்ட உத்தமாதிகாரிகளுள் காஞ்சீபுரம் ஸ்ரீ உ. வே. ஈச்சம்பாடி ஸ்ரீநிவாஸ ராகவாசாரியர் ஸ்வாமி கள் தலைமை ஸ்தானம் பெற்றிருந்தவரென்று தெரிகிறது. அவருடைய ஸ்ரீ வைஷ்ணவத்திற்கு இது ப்ராப்தமான கைங்கரியந்தானே. ஆனால் வெகு நாள் வரையில் அந்த ஸ்வாமி தம்முடைய அந்த விசாலமான திருவுள்ளத்தைக் காட்டிக்கொள்ள பிரகாசமாக வெளி வராமல் மறைமுக மாகவே யிருந்து வந்தார். அது நிற்க.

போலிப் பொருள்களைக் களைந்து உண்மைப் பொருள் களைத் தாபிக்க நமது ஸ்வாமி யொருவரே அவதாரம் செய்திருப்பதால் “நான் கண்ட நல்லது” என்னும் அழ கிய திருநாமங் கொண்ட அற்புதமான நூலை நம் ஸ்வாமி அப்போதே வெளியிட்டு, ஆக்ஷேப கர்த்தாவான முதலியார் செய்திருந்த பூர்வாசார்ய தூஷணைகளை யெல்லாம் வேரோ டுங் களைந்து உண்மைப் பொருள்களை உலகறிய ஓங்க வைத்து, ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத பண்டிதோத்தமர்களுங் கூட மிகமிகப் புகழ்ந்து மதிப்புரைகள் வழங்கும்படி செய்து நின்றார். அச்சிறந்த தொண்டில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக் குப் பொறாமை யுண்டாகக் காரணமுண்டோ! பொறாமை யென்பது மருந்தில்லாத விசித்திரமான வியாதியாதலால் முன் சொன்ன ஈச்சம்பாடி ஸ்வாமிகள் தம்முடைய ஆர்த் தியை உள்ளே யடக்கிவைத்துக்கொண்டிருக்க மாட்டாமல்

விவாதபுத்தகத்தைச் சிலநாட்களுக்கு முன்பு வெளியிட்டார். அதன் பெயர்தான் "முத்தம் சண்ணம் மொட்டு என்னும் சொற்பொருள் விளக்கம்" என்பது. இது காஞ்சீபுரத்தி லேயே அச்சிடப்பட்ட புத்தகம். ஆனல் இவர் இதைப் பண்டிதர்களுக்குச் சமர்ப்பிக்கச் சிறிதும் தைரியமற்றவராய் இதரர்களுக்கே ஏகாந்தமாக வழங்கி வருகிறார். இதைத் தாம் அப்புத்தகத்திலேயே எழுதிவைத்துமிருக்கிறார். புத்தகத் தைப் பண்டிதர்களிடங் கொடுக்கத் துணிவில்லாதவர் எதற்கு எழுதவேணும்? ஏன் அச்சிடவேணும்? ஏதோ வொரு நப்பாசை தூண்ட எழுதினார், அச்சிட்டார். உண்மையில் அப்புத்தகம் இவருடைய கிருதியுமல்ல. அந்த முதலியாருடைய சொல் நடை முன்னமே வெளி வந்திருக்கிறதே, அந்தச் சொல் நடைதான் அப்படியேயுள்ளது. அதற்கேற்றபடி அம்முதலியாரை உயரத்தூக்கி வைத்துமெழுதியுள்ளது. இயற்றியவர் ஈச்சம் பாடி ஸ்ரீநிவாஸராகவாசாரியர் என்று கம்பீரமாகக் கொட்டையெழுத்தில் அச்சிடப்பெற்றது. அச்சிட்டு வெளி யேறின புத்தகம் பாமரர்கள் கையிலேயே நின்றுவிடுமென்ன முடியுமோ? பண்டிதர்களின் கைக்கும் எட்டாமற் போகு மோ? எட்டியபின் அதன் கதி என்னகவேண்டும்! திரு மங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (4-10-6) "காற்றி டைப்பூளை கரந்தனவரந்தை யுற" என்றுஅருளிச்செய்துள்ள படி பெருங்காற்றில் பூளைப்பூ படும்பாடு பட்டொழிய வேண்டியதுதானே. அப்படியே பட்டொழிந்தது. அதற்கு அடியேனே மூலகாரணமாயிருந்து ஸ்ரீ ஸ்வாமி ஸந்நிதி யிலே பிரார்த்தித்து "முத்தம் சண்ணம் மொட்டு மெய்ப்பொ ருள்" என்னும் அற்புதமான நூலை அவதரிப்பித்து இவ்வுல கின்கணெங்குமுள்ள பண்டிதர்களுக்கும் வித்வான்களுக்கும் மடாதிபதிகளுக்கும் மற்றையோர்க்கும் கிடைக்கச் செய் தனன்.

மெய்ப்பொருள் தெளியாது மயங்கினவர்களைத் தெளி விக்கவேண்டுவதே முதற்பணியாதலால் ஷெ ஈச்சம்பாடி ஸ்வாமிக்கும் அச்சஞ்சிகை தபால் மூலமாக அனுப்பப்பட் டிருந்தது. அவர் அதைப்பெற்று முற்றும் படித்து மனச்

துள்ளார கோவிநதராஜா. இவவிஷயததை எடுததுச சொலலுபவனே நிதய பரஹமசாரியான திருவடி. கேட் பவளோ மாதாக்குயாநதமைதிலி ஒரு ஜிதேநதரியன் ஒரு பெண்ணரசியினிடததில புமலிஙக பரிமாணஙகளை எப் படி கூறினன? அவளதான எபபடி கேட்டுககொணடிருந தாள்? இதையெலலாம கேடட பிராடடி பரமானநத மடைநது ஆனநதககண்ணீர பெருககினதாகவும (35-85.) சொலலப்பபட்டுளது * பிதாமஹஸயாபி பிதாமஹாய * எனகிற தனியனபடி திருமலைநமபிபககலில ஓராண்டு வாழுநது ஸ்ரீராமாயண மஹாரததஙகளை விரிவாகக கேட டருளின ஸ்வாமி பாஷயகாரர இவவுடையாளஙகளைப்பற் றின விரிவுகளையும உபதேசமுறையில தாம கேட்டுத தரித தும தமாகளுககு உபதேசிததுமிருககவேண்டுமே. இதில அருவருபபொனறு மிலலையெனின், ஸ்ரீ கருஷ்ணசிசுவின் ஸாவஜநதருச்யமாய் ஸாவஜநமநோஹாரியான திவயா வயவ விசேஷததைபபறறித தாயான யசோதை அமுதினு மாற்ற வினிய சொறகளாலே சொனனு ளாகில 'எலலே! ாதென்ன வினிமை!' எனறு உள்குழையவனரோ ப்ராப் தம.

22. திருவிருததததில (7)*ஞாலம பனிப்பச்செறிதது நன்னீரிட்டுக காலசிதைநது நீலவலலேறு பொராகினற வானமிது * எனற பாட்டின பொருளைச சிறிது உணர வேணும. காலமயககுததுறையில அமைநதது இப்பாசு ரம. தலைவியோடு கூடியிருநத தலைவன ஒருகாரியப் பாடாகத் தேசாநதரஞ செலலவேண்டிக காரகாலததிலே திருமபி வருவதாகக் காலங குறிததுப் பிரிநது சென்று அககாரகாலம வநதவளவிலும தான வாராதிருகக, கார் காலவரவையும காதலன வாராமையையும நோககி வருந் துகினற தலைவியைத தோழியானவள 'நஙகாய! நீ என்

படியால் அந்த துக்கத்திற்குப் போக்கு வீடாக ஏதோ பேசிவருகிறாரென்னு முண்மையை உலகமறியும். ஸ்வாமி யின் ஸஞ்சிகையைக் காண இவர்க்கு விருப்பமில்லையாகில் அதனைத் திருப்பியனுப்பிவிடத் தட்டுண்டோ? கட்டாயம் பெற்றேயாகவேணும், படித்தேயாகவேணுமென்று ராஜ சாஸன மில்லையே. தமது புத்தகத்திற் போலவே இதிலும் நிந்தனைகளே யிருக்குமென்றும், பதிலுக்கு நாமும் சரமாரி யாக நிந்திக்கலா மென்றும் நினைத்து ஸஞ்சிகையைப் பெற்று ஸேவித்தார். ஒருவகையாகவும் வாய்திறக்க வழியின்மை கண்டு தெருவில்தூற்றுவதே சரணமென்று கொண் டாரித்தனை.

இவ்வீச்சம்பாடி ஸ்வாமியின் நிந்தனை ஸ்வாமி யொரு வரோடு நிற்கவில்லை; தாம் மணவாள மாமுனிகளிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவர் போல நடித்து, மணவாள மாமுனி களின் ஸ்ரீஸூக்திவழியாக திவ்யப்ரபந்தார்த்தங்களை அறியப் பெறாத தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு உண்மைப்பொருள் தெரியாதென்று அவர்களையும் தூஷித்தும் அவர்களில் தலைவரான ஸ்ரீ பரகாலஸ்வாமியையும் தூஷித்தும் (அதா வது) ஸ்ரீபரகாலஸ்வாமி தம்முடைய ஸம்பிரதாயத்திற்கு விரோதமாக அண்ணங்கராசாரியரோடு சேர்ந்து தப்பாகப் பிரசுரம் செய்கிறாரென்று காட்டியும் இப்படி நிந்தைக்களஞ் சியத்தை அச்சிட்டுவிட்டு, "எனக்கேன் புத்தகமனுப்பு கிறாரிவர்" என்று தெருக் கூச்சலிட்டால் இதற்கு என்ன அர்த்த மென்பதை அடியேனறிய வேண்டும். அது கிடக்க.

ஸ்ரீ ஸ்வாமியின் மெய்ப்பொருள் விளக்க நூலைப்பற்றி ப்ரவஸித்தர்களான பல மஹான்களின் அபிப்ராய பத்ரிகை களையும் சேகரித்து வெளியிடவேணுமென்னுமவா அடியே னுக்குத் தோன்றியதனால் அப்படிப்பட்ட மஹநீயர்கள் பல ருடைய திரு முகங்களைப் பிரார்த்தித்துப் பெற்று அவரவர் களது திருவுருவப்படங்களோடுங் கூட வெளியிடுங் கைங் கரியத்தை அடியேன் மேற்கொண்டிருக்கிறேன்.

இப்படிக்கு:

புரிசை. பரவஸ்து. வரததாஸன்.

16—10—50.

# திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருக்கும் வித்வத்வரிஷ்டரான ஸ்ரீமத் உ. வே. வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் ஸ்ரீ முகம்.

ஸ்ரீ ராமாநுஜனில் வெளிவந்த, முத்நம் முதலிய சொற்களின் மெய்ப் பொருளாராய்ச்சியைக் கண்டு மகிழ்ந்தேன். முத்தம் முதலியவற்றைப்பற்றி இப்போது புதிதாக வொரு கிளர்ச்சியைக் கிளப்பியவர் சில மாதங்கட்கு முன் அடியேனது க்ருஹத்திற்கு வந்திருந்து தம்முடைய அபிப்ராயத்தை வெளியிட்டார். அவர் தாம் ஏதோ விடாப்பிடியாய்ச் சில சொல்லுவதால் அடியேன் விஜ்ஞாபிப்பது அவரது செவியில் ஏறவில்லை யென்று தெரிந்தது. "அடியேன் பெரியோர்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டுள்ளவற்றை மாற்றிக்கொள்ளும்படி உம்முடைய வார்த்தையை விரும்பவில்லை" என்று சொல்லியதோடு "நான் சொல்வது ஒன்றும் உமக்கு ஏறாது; உம் இஷ்டப்படி நீர் எதையாவது சொல்லிக்கொண்டிரும்" என்று முடிவாகச் சொல்லி நின்றேன். அவர் சற்றுப் போது இருந்து பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம், தமிழ் லெக்ஸிகன் அகராதி இவற்றினின்று சில குறித்துக்கொண்டு சென்றார். இது முன் நிகழ்ந்தது.

அந்வர்த்தமான பிருதாவளிகளுடன் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமி பிறர் எழுதும் அபார்த்தங்களை நிரஸித்து ஸமீசீநார்த்தங்களை ஸ்தாபிப்பதில் பொங்கும் கடல் என்று அடியேன் கருதியுள்ளேன். எழுதியவர் தம்மைப் போறிவினராகக் கருதியெழுதியிருக்கின்றாரென்று கொண்டு ஒரு பொருளும் விடாமல் பரிஷ்காரமாகவே ஸ்வாமி தமது மெய்ப்பொருள்

வியாஸத்தை அமைத்துள்ளா ரென்பதை த்ரிகரண சுத்தி யாய் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்.

இங்ஙனம், சரமாவதி தாஸன்
வை. மு. கோபாலக்ருஷ்ணமா சார்யன்.
திருவல்லிக்கேணி 19—10=50

---

பதிப்பாசிரியரின் குறிப்பு. ஷை ஸ்ரீ முகத்தில்—"எழுதியவர் தம்மைப் பேரறிவினராகக் கருதி யெழுதியிருக்கின்றா ரென்று கொண்டு" என்றுள்ள ஸ்ரீ ஸூக்தியின் காம்பீர்யம் அளவிட முடியாதது. *விவாதச் ச விவாஹச்ச! ஸமயோரேவ சோபதே* என்பதை நம்ஸ்வாமி கணிசியாது, மஹாப்ராஜ்ஞர் களுக்கு உணர்த்த வேண்டிய அரிய பெரிய அர்த்த விசேஷங்களை சிற்றறிவினரொருவரை வியாஜமாகக் கொண்டு முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னுமாக வாரியிறைத் திருக்கிறாரே! என் பதுதான் மஹான்களனைவரும் ஏகமுகமாகச் சொல்லுவது.

———

# — முக்கிய விஜ்ஞாபனம் —

பல திசைகளிலிருந்தும் பல பல மஹான்களின் ஸ்ரீ முகங்கள் தினப்படியாகப் பல வந்து கொண்டிருக்கின்றன. சக்ரவர்த்தி திருமகனார் காகத்தின் மீது ப்ரஹ்மாஸ்த்ரம் தொடுத்த கதையாக ஆய்விட்டதே யென்று நமக்குள் சிரிப் பாகிறது. நிற்க.

## ஸ்ரீமத். உ. வே. வித்வான். வேதவ்யாஸ பட்டர் திருவம்சத்தவரான திருமலை பட்டர் ஸ்வாமியின் திருமுகம்.

Camp. Coimbatore,
72, ஸலிவன் வீதி, பட்டர் திருமாளிகை.

பெரியாழ்வாருடைய முத்தம் சண்ணம் மொட்டுச் சொற்களில் அன்றுதொட்டு இன்றுவரையில் அர்த்த ஸந்தேஹமோ அர்த்த விவாதமோ கேட்டதில்லை. இதை யொரு அவ்யபதேச்யர் அநாவச்யகமாகக் கிளப்பிவிட்ட தானது உலகுக்கெல்லாம் எந்நாளும் மறக்க முடியாத மஹோபகாரமாய்த் தலைக்கட்டியது. நம் ஸ்வாமி அரிய பெரிய சீரிய பொருள்களை வெளியிடுவதற்கு மிகவும் அல்பமான வியாஜமொன்று கிடைக்க வேணுமென்றுண்டு. அப்படிப்பட்ட வியாஜம் ஒருவர் மூலமாகக் கிடைத்து விடவே ஸ்வாமியின் திவ்யஸூக்திகள் "கடல்வாய்ச் சென்று மேகங் கவிழ்ந்திறங்கிக் கதுவாய்பட நீர் முகந் தேறி, எங்கும் குடவாய்பட நின்று மழை பொழியும்" என்று பெரியாழ்வாரும், "தாழாதே சார்ங்க முதைத்த சரமழை போல்" என்று அவ்வாழ்வார் திருமகளாரும் அருளிச் செய்தபடியே அமைந்த அழகை நினைக்குங்கால் இந்த விசாரத்தைக் கிளப்பிய மஹாநுபாவரையே விசேஷமாகப் போற்றவேணுமென்று அடியேனது நெஞ்சில் படுகிறது. நம் ஸ்வாமியின் ஆசார்யரான காதிஸ்வாமி யென்று ஜகத்ப்ரக்க்யாதரான ஸ்ரீ அனந்தாசார்ய ஸ்வாமி காசிக்கு எழுந்தருளிய போது அங்கு ருத்ரபட்டனென்கிற ஒரு அல்பஜ்ஞன் ஏதோ விவாதத்தைக் கிளப்பி விட, சிறிதும் பொருள் படுத்த வேண்டாத அதையும் அந்த ஸ்வாமி பெரிய விஷயமாகக் கொண்டு மிகப் பெரிய காரியம் செய்தருளினரென்று கேட்டிருந்தோம். அவ்விதமாகவே நம் ஸ்வாமியும் 'சிறிய பாம்பாயினும் பெரிய தடியிட்டடி' என்கிற முறையில் அல்பனையும் அநல்பஸூக்திகளால் தலைமடியச் செய்வது போற்றத் தக்கதேயாம்.

தாஸன், வேதவ்யாஸ பட்டர் திருமலை ஐயங்கார்.

# முத்தம் சண்ணம் மொட்டு மெய்ப்பொருள்

ஸ்ரீ காஞ்சி. ப்ர. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி
அருளியது.

1. தமிழ்வேத மென்று போற்றப்படும் திவ்யப் பிர பந்தப் பாசுரங்களின் திவ்யார்த்தங்களை நாம் உள்ளபடி யுணரப் பூருவாசாரியர்களின் அரியபெரிய வியாக்கியா னங்களே சிறந்த ஸாதனங்கள். விசதவாக்சிகாமணிக ளென்று விருதுபெற்ற மணவாள மாமுனிகளின் வியாக் கியானமுள்ள பகுதிகளில் பொருள் விளக்கம்பெற யாரும் தடுமாற வேண்டியதில்லையன்றே. முத்தம், சண்ணம், மொட்டு என்னும் மூன்று சொற்களும் பெரியாழ்வார் திருமொழி முதற்பத்தில் வருவன. இச்சொற்களைக் கொண்ட பாசுரங்களுக்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் தெள்ளமுதெனத் திகழ்வதனால் மற்று எந்த வுரையையும் கண்ணெடுத்துப் பாராமல் அந்த விசத வாக் சிகாமணிகளின் விசதவாக்கையே கொண்டு விவாத பதங்களின் உண்மைப் பொருளை உணர்வோம், உணர்த்து வோம்.

2. பெரியாழ்வார் திருமொழியில் * சீதக்கடலென் னும் பதிகமானது—யசோதைப்பிராட்டி தன்னிடம் வந்து சேர்ந்த ஸ்ரீ கிருஷ்ண சிசுவின் திவ்யாவயவ ஸௌந்தர்யத் தைப் பாதாதி கேசாந்தமாகத் தோழிப்பெண்களுக்குக் காட்டியவாறு யமைக்கப்பட்டுள்ளது. பாதாரவிந்தம், விரல்கள், கணைக்கால், முழந்தாள், துடை ஆகியவற்றை முதலிருந்து ஐந்து பாசுரங்களினால் காட்டியானபின் * மத்

தக்களிறென்னு மாருவது பாசுரத்தில் * முத்த மிருந்தவா காணீரே * என்று முத்தமிருந்தபடி காட்டப்படுகிறது. இப்பாசுரத்திற்கு அவதாரிகையிடும் மணவாள மாமுனிகள் " திருத்துடையிலழகை அநுபவித்த வனந்தரம் திருக்கடிப்ரதேசத்திலழகை அனுபவிக்கிருர் " என் று அருளிச் செய்துள்ளார். மாமுனிகளின் வியாக்கியானத்திற்கு அரும்பதவுரையொன்று அநபேக்ஷிதமாயிருக்கவும் ஜீயரும் பதவுரை யொன்று அவதரித்து அதுவும் அச்சேறியுள்ளது. அதில் " திருக்கடிப்ரதேசமாவது— கடிப்ரதேசவர்த்தி பும்ஸ்த்வ சிஹ்நமான அவயவ விசேஷம்" என்று விவரணம் காட்டப்பட்டுள்ளது. கண்ணபிரானுடைய ஆண்குறியைக் காட்டுவதாக ஸுஸ்பஷ்டமான விவரண முள்ளது. ஆனல் இங்கு மாமுனிகளின் திவ்ய ஸூக்தி யொழிய வேறென்றும் சான்ருகக் கொள்ளப்பட வேண்டாவென்பது நமது கருத்தாதலால் அவ்வரும்பதவுரை இங்கு நமக்குப் பிரமாணமாக வேண்டா. மூலத்தில் * முத்தமிருந்தவா காணீரே * என்பதனல் திருக்கடி ப்ரதேசத்தினழகை யநுபவிப்பதாகக் காட்டியருளின மாமுனிகள் கடிப்ரதேச சப்தத்தினல் விவக்ஷித்த அவயவ விசேஷம் எது? என்பதில் ஸத்ஸம்ப்ரதாயஜ்ஞர்களுக்கு ஸந்தேஹ விபர்யயங்களிருக்க ப்ரஸக்தியில்லே. சிலர்க்கு ஸந்தேஹ முண்டாகுமென்று மாமுனிகளே திருவுள்ளம்பற்றி, பாட்டிஹுரையில் " முத்தமிருந்தபடியைக் காணுங்கோள் " என்றருளிச் செய்தபின் " முத்தம் — சண்ணம் "என்று மருளிச் செய்தனர்.

3. 1914-ஆம் வருஷத்தில் சென்னை ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையார் பதிப்பித்த வியாக்கியானத்தில் " சண்ணம் " என்ற பிறகு " அதாவது கடிப்ரதேசம் " என்ருெரு வாக்கியம் அதிகமாகக் காண்கிறது. 1880-ஆம் ஆண்டில் வெளிவந்த சித்திரகூடம் திருவேங்கடாசாரியர்

பதிப்பில் அந்த வாக்கியம் கிடையாது. அவதாரிகையினுல் புநருக்த மாகிறபடியால் இந்த வாக்கியம் அநபேக்ஷிதம். இது இருக்கவுமாம், இல்லையாகவுமாம் ; இதில் விவாத மில்லை. "முத்தம்—சண்ணம்" என்றருளிச் செய்திருப்ப தனுல், முத்தம் என்பதற்குச் சண்ணமென்பது பொருள் என்று மாமுனிகள் திருவுள்ளம் பற்றினரென்பதறிய லாயிற்று. "டீகா ரோமபேக்ஷதே" என்கிற முறையில் வியாக்கியானம் செய்பவரல்லர் மாமுனிகள். **சண்ணம்** என்ற சொல்லின் பொருள் ஸுப்ரஸித்தம் என்று கொண்டே மாமுனிகள் (முத்தமாவது சண்ணம்) என்று அருளிச் செய்துவைத்தார்.

4. **சண்ணம்** என்கிற சொல்லும் பெரியாழ்வார் திருவாக்கிலேயே அவதரித் திருப்பதால் அவ்விடத்து மாமுனிகளின் வியாக்கியானம் என்ன வென்று பார்ப் போம். கண்ணபிரானுடைய தளர்நடையைக் கோரும் பதிகமாகிய * தொடர் சங்கிலிகையில் பத்தாம் பாட் டில் * சிறுச் சண்ணம் துள்ளஞ் சோரத் தளர்நடை நடவானே * என்றுள்ளது. இவ்விடத்து மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு ;—"[பெருநீர் இத் யாதி.] தீர்த்தங்களில் ப்ரஸித்தமாய், ப்ரவாஹ ஜலம் மாரு மல் அலையெறிகிற கங்கையிலுங் காட்டில் பெரியதாய் அத்விதீயமான தீர்த்த பலத்தைத் தரும் ஜலத்தையுடைத் தான சிறுச்சண்ண மானது துளிக்கத் துளிக்கத் தளர் நடை நடவானே." என்றிவ்வளவே யுள்ளது.

5. கீழே "முத்தமாவது சண்ணம்" என்று விவ ரணம் காட்டியருளினவர் சண்ணமாவது இன்னதென்று விவரணம் காட்டியருள வேண்டுமே ; காட்டிற்றிலர் ; ஏனென்னில்; 'இதன் பொருள் ஸுப்ரஸித்தமிறே' என்

கிற திருவுள்ளத்தினுலாம். அது ஸுப்ரஸித்தமென்ப தைச் சிறிது உபபாதிக்கிறேம். ஆண்குறியைச் சுண்ணி யென வழங்குவது உலகவழக்கு. சிச்ந மென்னும் வட சொல்லானது தமிழில் சின்னமெனத் திரிந்து அதுவே சண்ணமென்றும் சுண்ணி யென்றும் திரிந்து வழங்குவ தாகப் பேரறிஞர் பகர்வர். ப்ரஸவ மென்னும் பொருள தான ஸூதி என்கிற வடசொல் வெகு விகாரமடைந்து பெண்குறிக்கு வாசகமாக உலகில் வழங்கிவரக் காணு நின்றேமன்றே. அது போலவே இதுவும். வடசொல்லில் ணகரத்திற்கு முன்வரும் ரகரம் [ரேபம்] ணகரமாகவே மாறுதலை சூர்ணம், வர்ணம் முதலிய சொற்களிற் கண்டோ மாதலால் சரணம் என்னும் வட சொல்லே சண்ணமெனத் திரிந்ததாகக் கொள்வதும் பொருந்தும். சரணமென்னுஞ் சொல் காலுக்கு வாசகமாய் காலிடையிலுள்ள குறிக்கு ஆகு பெயராகும். மாடுகளுக்குச் செய்யும் பீஜமர்த்தனத் திற்குக் கால் பிடித்தலென்னும் வழக்குள்ளது. நாபிதர் கள் ஒரு வபநத்தைக் கால்வழித்த லென்பர்கள். இங் ஙனே பல பல வழக்குக்களை நினைக்கலாம். குஹ்ய மென்றே சொல்லப்படுகிற அவயவ விசேஷத்தை ஸாக்ஷாத் வாசக பதத்தையிட்டுச் சொல்லாது ஸங்கிஹிதமான அவய வாந்தரத்திற்கு வாசகமானதொரு பதத்தையிட்டுச் சொல் லுதல் வேதவழக்கு. நமது யஜுர் வேதத்தில் ஆருவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்நத்தில் (31.) * ஊரு—ணா ஹி ரெ தஃஸி அ௫ெத நஹ௦கரூத௫ ஊரு—உ—வ ஷு வ த—உப தி யஉாஹி நஹ ஊரு—ஜ—உவ தி சுயஜிய—நீஜவ தஃ சுயரெ தஃஸி அ௫ெத சுயஷு ஜா ஃ ஷு ஜாயதெ * என்று ஓதப்படுகிறது. இதில் துடைக்கு வாசகமான ஊருபதம் பலகால் வரு கிறது; ஆனல் இங்குத் துடையென்னும் பொருளில்லை. துடைக் கருகேயுள்ள குஹ்யத்தைச் சொல்லுகிறதென்று பாஷ்யமுள்ளது. " ஊரு—ஃ—ஊரு—உாநு ஷு ஜ ந நஷு

ஜெ.ம : ” என்பது பட்டபாஸ்கரபாஷ்யபங்க்தி. இங்ஙனே நாமெடுத்துக்காட்டவுரிய இடங்கள் பல்லாயிரமுள. இப்போது இவ்வளவே போதும். **சரணம்** என்கிற வட சொல்லே சண்ணமெனத் திரிந்த தென்பதைப் பலர் இசைந்து காட்டியிருப்பதால் இதைப்பற்றி இங்குநாம் அதிகமெழுத வேண்டாவே.

6. இனி விமர்சிக்க வேண்டிய தொன்றே; சரண பதத்தின் திரிபாகிய **சண்ண** மென்னுஞ் சொல் சரண சப்தார்த்தமான திருவடியையே குறிக்கின்றதா? அல்லது வடமொழி வேதத்தினின்று எடுத்துக் காட்டிய ஊரு பதம் போலே குஹ்யாவயவ விசேஷத்தைக் குறிக்கின்றதா? என்பதே. திருவடியைத்தான் குறிக்கின்ற தென்று சொல்ல இடமில்லை; ஏனெனில், கீழே (**முத்தமாவது சண்ணம்**) என்று விவரணம் காட்டியருளின மணவாள மாமுனிகள் சண்ண மென்பதற்குத் திருவடியெனும் பொருளைத் திருவுள்ளம் பற்றினரென்கைக்குச் சிறிது மிடமின்மையால். * முத்தமிருந்தவாகாணீரே * என்ற விடத்திற்கு இட்டருளின அவதாரிகையில் கடிப்ரதேச மென்று அருளினவராதலால், முத்தமென்றும் சண்ணமென்றும் கடிப்ரதேச மென்றும் பர்யாயமென்று மாமுனிகளின் திருவுள்ளமாகத் திடமாய்த் தேறிற்று. ஆகவே * சிறுச் சண்ணந்துள்ளஞ் சோர * என்ற விடத்துச் சண்ண மென்பதனால் திருவடி விவக்ஷிதமன்று, கடிப்ரதேசந்தான் விவக்ஷிதமென்று ஊர்ஜிதமாயிற்று. கம்பீரமாகத் திருவெழுத்திடும் மஹான்கள் ஆண்குறி பெண்குறி யென்றுவது குஹ்யாவயவ மென்றுவது எழுதமாட்டார்களன்றோ. லாக்ஷணிக பதங்களை யிட்டுப் பேசுவதன்றோ முறைமை. “கண்ணனுடைய ஆண்குறியை யநுபவிக்கிறார்” என்று மஹாசார்ய பதஸ்தர்கள் எழுதுவர்கள். அது நேர்மையன்றாதலால் ‘ கடிப்ர

தேசத்தினழகை யநுபவிக்கிறார்' என்று அருள ப்ராப்தமா யிற்று. ஆனலும் ஸ்பஷ்டப்ரதிபத்தி யுண்டாகவேணு மென்பதற்காக “ அதாவது (முத்தமாவது) சண்ணம் ” என்றும் அருளினர்.

7. இங்கு ஒன்று கேட்கலாம்; *தொடர்சங்கிலிகைப் பாசுரத்தில் “ படுமும்மதப் புனல்சோர ” என்ற விடத்து, “ மும்மதப்புனலாவது—மத்த்தாலே கபோலத்வயமும் மேட்ர ஸ்தானமுமாகிற த்ரயத்தில் நின்று வடிகிற ஜலம் ” என்று வியாக்கியான வாக்கியம் காண்கிறதே; இங்கு மேட்ரமென்று ப்ரயோகிக்க வில்லையா? இதுபோலே ப்ரயோகித்திருக்கலாமே என்னலாம். உதாஹ்ருத ஸ்தலத் தில் மேட்ர மென்றது ஆசாரியர்களின் ஸ்வகீய ப்ரயோக மன்று. “ [illegible] ” என்று மல்லிநாதாதிகளும் உதாஹரித்துள்ள ப்ரமாணத்தி னின்று கொள்ளப்பட்டதாமது. ஆகவே அந்த பதத்தை அங்கு ப்ரயோகித்ததைக் கொண்டு அந்யத்ராபி ப்ரயோகா பாதகம் பண்ணுவது பொருந்தாது.

8. முக்கியமான வொருவிஷயம் இங்கு உள்ளத்திற் கொள்ளத்தக்கது; கேண்மின்; கண்ணபிரான் தளர்நடை நடக்கவேணுமென்று வேண்டுமிப் பதிகத்தின் முதற்பாட் டில் “ வாரணம் பைய நின்றூர்வதுபோல். தளர்நடை நட வானே ” என்று— யானைக்குட்டி மெல்ல நடந்து வருவது போல் கண்ணன் தளர்நடை நடக்கவேணுமென்று சொல்லி அந்த யானைக் குட்டிக்குச் சில அடையாளங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன ;—[தொடர் சங்கிலிகை சலார் பிலா ரென்ன] யானையானது இரும்புச் சங்கிலியின் தொடரில் கட்டிவைக்கப்பட்டு அதையுமிழுத்துக்கொண்டு நடக்கும் ; [தூங்குபோன்மணி யோலிப்ப] கயிற்றினல்கட்டித் தனது இருபுறத்திலும் தொங்கவிட்ட மணிகள் ஒலிக்கப்பெற்று நடக்கும் ; [படுமும்மதப்புனல் சோர] மூன்று வகையான

மதநீர் பெருகப்பெற்று நடக்கும். என்றிங்ஙனே சொல்லப் பட்ட அடையாளங்கள் உபமானமான யானைக்குட்டி யினிடத்து மாத்திரமன்றிக்கே உபமேயமான கண்ணனிடத் தும் விவக்ஷிதமாகப் பொருந்தவேண்டும் ; இல்லையேல் முன் ஒன்றரையடிகள் வீணாகவே பாட்டைப் பூரித்துக் கிடப்பன வாகும். அங்ஙனே யாகவொண்ணாது ; யானை தொடர் சங்கிலிகை சலார்பிலாரென்ன ஊர்வதுபோலக் கண்ணனும் தன் திருவடிகளிலணிந்த ஆபரணங்கள் சலார்பிலாரென்ன நடப்பன் ; யானை தூங்குபொன்மணி யொலிப்ப ஊர்வது போலக் கண்ணனும் உடைமணி பறைகறங்க நடப்பன் ; யானை மும்மதப்புனல் சோர ஊர்வது போலக் கண்ணனும் மூவிடப் புனல்சோர நடப்பன் ; கன்னமிரண்டும் குறி யொன்றுமாகிய மூவிடங்களிலும் தோன்றும் மதமே மும்மதமாதலால் கண்ணனுக்கும் அங்ஙனே மூவகைநீர்ப் பெருக்கு நிரூபிக்கப்பட வேண்டியது பொருத்தமாயிற்று. இதனை அப்பதிகந் தன்னிலேயே ஆழ்வார்தாமே 9, 10 ஆகிய இரண்டு பாசுரங்களிலும் அடைவே நிரூபித்தருளு கிறார். ஒன்பதாம் பாட்டில் * வேழத்தின் கருங்கன்று போல் * என்று மீண்டும் யானையை ப்ரஸ்தாவித்து * தெண் புழுதி யாடித் திரிவிக்கிரமன் சிறுபுகர்பட வியர்த்து * என்று வியர்வை நீர் பெருகப் பெற்றதையே யானையின் கபோல மதநீர்க் கொப்பாகக் குறிப்பிட்டு, அதற்கடுத்த பத்தாம் பாட்டில்—கீழே 'மும்மதப்புனல் சோர' என்ற விடத்து வியாக்யான ஸித்தமான மூன்றாவது நீர்க்கொப்பாகவே 'சிறுச் சண்ணந் துள்ளஞ்சோர' என்று அருளிச் செய்கிறு ராதலின் இவ்வுபபத்தியை யிட்டும் சண்ணமென்பதற்குக் குறியேதான் பொருளாகப் பகரப் பொருந்தும்.

9. அன்றியும், * பெருநீர்த்திரையெழு கங்கையிலும் பெரியதோர் தீர்த்தபலந்தருநீர் * என்கிற விசேஷோக்தியை

உற்று நோக்குமிடத்து வேறொரு பொருளுக்கிடமில்லை; 'மூத்திர நீர்தானே, இதைப் பாராட்டிக் கூறவேணுமோ?' என்று சிலர் வெறுப்பாக நினையாமைக்காகவே 'கங்கையிற் புனிதங்களாணும் இச்சிறுநீர்' என்ன வேண்டிற்று. ஹேயமாக நினைக்கக்கூடிய ப்ரஸக்தியுள்ளவிடத்தில்தானே சிறப்புரைத்தல் நிறம்பெறும். ஆண்டாள் * தூயபெருநீர் யமுனை * என்று யமுனைக்குத் தூய்மையிற் பெருமை கூறியது வெறுமனன்றே; கம்ஸன் மாளிகைக் கீழே பெருகுவதனால் ஹேயமென்று நினைக்க ப்ரஸக்தியுண்டாகியே அங்ஙனம் நினையாமைக்காகத் தூய்மையிற் பெருமை சொல்லிற்று. வேதாந்த வாசிரியர் கோதாஸ்துதியில் * ப்ராயேண தேவி பவதீவ்யபதேச யோகாத் கோதாவரீ ஜகதிதம் பயஸா புநீதே * என்று கோதாவரிக்குத் தூய்மை கூறினதும் அந்நதியிடத்து ஹேயதா ப்ரதிபத்திக்கு இடமுண்டானமைபற்றியேயன்றோ; * ஹம்ஸகாரண்டவாகீர்ணாம் வந்தே கோதாவரீம் நதீம், க்ஷிப்ரம் ராமாய சம்ஸ த்வம் ஸீதாம் ஹரதி ராவண: * என்கிற ஸ்ரீராமாயணத்தின்படி பிராட்டி வேண்டச் செய்தேயும் இராவணனுக்கு அஞ்சி இராமபிரானிடம் செய்தி சொல்லாமையினாலே புனிதத்தன்மையையிழந்ததென்று சொல்லிற்றிறே. இவ்வகையில், சிசுபால கோஷ்டியார் கண்ணனது சிறுநீரை மற்றையோருடைய சிறுநீரோடொப்ப நினைத்து லகுவாக எண்ணக் கூடுமென்றெண்ணியே 'பாவிகாள்! அங்ஙனம் நினையாதொழிமின்; பெருநீர்த்திரையெழு கங்கையிலும் பெரியதோர் தீர்த்த பலந்தருநீர் கண்மினிது' என்று அருளிச்செய்ய ப்ராப்தமாயிற்று.

10. இனி * வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க மொட்டு நுனியின் முளைக்கின்ற முத்தேபோல் சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்க * என்ற பாசுரத்திற்

புகுந்து ஆராய்வோம். இப்பாசுரத்திற்கு ஒருவருடைய வியாக்கியானமும் வேண்டாவாயிருந்தது. “முத்தேபோல் சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்க” என்ற சொல்நயம் மூத்ர ஜலஸ்ருதிக்கன்றி மற்றொன்றுக்கும் இணங்காதே. இரண்டு அண்ட கோசங்களின் நடுவே குறி திகழ்வதானது—இரண்டு நீலரத்ன வட்டுக்களின் நடுவே ஒரு நீலரத்ன மொட்டு வளர்வது போன்றுளது என்று இங்கே விவக்ஷை. இங்கு ரூபகாதிசயோக்தி யென்னு மலங்காரம் அமைந்துள்ளது. பெரியாழ்வார் திருமொழிக்கு நாம் எழுதி தேவநாகரலிபியிலும் தெலுங்கு லிபியிலும் வெளியிட்டுள்ள ஸம்ஸ்க்ருத வியாக்கியானத்தில் இதை நன்கு விவரித்துள்ளோம்; அவ்விடத்துப் பங்க்திகள் இவை காண்மின் ;— “ [illegible] ” என்று. மொட்டு என்பதற்கு ஸாக்ஷாத்தாகவே ஆண்குறி யென்று பொருளன்று. “தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே” என்ற நம்மாழ்வாருளிச் செயலில் தாமரை யென்னுஞ் சொல்லுக்குத் திருவடியென்ற பொருள் எவ்விதமாகக் கொள்ளலாகிறதோ அவ்வித மாகவே மொட்டு என்கிற விதற்கும் குறியென்னும் பொருள் தேறி நிற்கின்றது. ‘இரண்டு நீலோற்பலங்களினின்று கூரிய அம்புகள் கிளர்கின்றன’ என்றால், மாதருடைய இருகண்களினின்று கடாக்ஷபாதங்கள் கிளர்கின்றனவென்பதே பொருளாகத் தேறுவதுபோல, இரண்டுவட்டுக்களின் நடுவே ஒரு மாணிக்க மொட்டுதோன்றி அதன் நுனியில் முத்துமுளைக்கின்றது என்றால்—இரண்டு அண்ட கோசங்களினிடையே

குறிதோன்றி அதன் நுனியினின்று மூத்திரபிந்து முளைக்கின்றது என்பதே பொருளாகத் தேறிநிற்கும். இந்த விவரணத்தைப்பொறுக்கும் படியாகவே மாமுனிகளின் வியாக்க்யானம் அதிகம்பீர ஸரணியில் அமைந்துள்ளது.

11. மாமுனிகளின் வியாக்கியானத்தோடு கூட அச்சிடப் பெற்றுள்ள மற்றொரு வியாக்கியானத்தில் இங்கு ஒரு ஐதிஹ்ய விசேஷமும் ஆச்சான்பிள்ளை யருளிச் செய்யும்படி யென்று காட்டப்பட்டுள்ளது; ஒருநாள் ராஜ கோஷ்டியிலே இப்பாட்டு ப்ரஸ்துதமாயிற்றாம்; சைசவாவஸ்தையை இங்ஙனே பேசினபடி வெகு நன்றாயிருக்கிறதென்று அரசன் பாராட்டிக் கூறினனும்; ஏதோ க்ராம்யமாகச் சொல்லியிருக்கிறவிது கொண்டாடத்தகுந்ததோவென்று அங்கிருந்தவோர் அறியாதான் க்ஷேபித்தானும்; அதற்குமேல் ஒரு ஸமாதானம் சொல்லப்பட்டதாம். .........இப்படியோரைதிஹ்ய மெழுதப்பட்டுள்ளது. கீழே நாம் விவரித்தபடியே பாசுரப் பொருளாக இருந்தாலன்றி இவ்வைதிஹ்யம் அமையாது.

12. புனிதமான பிரபந்தத்தில் குறியைப்பற்றியும் மூத்திரத்தைப் பற்றியும் ப்ரஸ்தாவித்துப்பேசுவது வெறுக்கத் தக்கதல்லவா வென்று சங்கிப்பார்க்கு விரிவாகவே விளம்புவோமிங்கு. ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாம பாடத்தில் த்யானச் லோகமாக உலகமெல்லாம் அநுஸந்தானம் செய்துவரும் * பூ: பாதௌ யஸ்ய நாபி:* என்னும் ச்லோகத்தில் "யஸ்ய வாஸ்தேயமப்தி:" என்றுள்ளது. 'வாஸ்தேயம்' என்பதற்கு மூத்திர மென்னும் பொருளே பெரியார்களின் பாஷ்யத்திற் காண்பது; வேறு பொருள் எதுவும் பொருந்தாது. இப்பொருளுண்மையை யறியாதார் பலர் "யஸ்ய வாஸோயம்" என்றும் "யஸ்ய வாஸ்தவ்யம்" என்றும், "யஸ்யவாஸ்தோ

யம்" என்றும் மனம் போனபடி தவறான பாடங்களை யோதுகின்றனர். ஸகலவித்வஜ்ஜந பரிக்ருஹீதமான பாடத்தின் படியும் வியாக்கியானத்தின் படியும் மூத்திரமென்று சொல்லியிருப்பதை யாரும் வெறுக்கவில்லை, எவரும் மறுக்கவில்லை.

13. அவ்வளவு தூரம் போகவேணுமோ? பெரியாழ்வார் திருமொழியிலேயே இரண்டு மூன்றிடங்களெடுத்துக் காட்டுவோம். (5-2-3.) *வயிற்றில் தொழுவைப் பிரித்து* என்ற பாட்டில் "காலிடைப்பாசங் கழற்றி* என்பதற்கு வியாக்கியான மருளா நின்ற பெரியவாச்சான்பிள்ளை பல பொருள்கள் பணித்து, சாமார்த்தமாகப் பணிக்கின்றார்— "காலிடைப்பாச மென்று*ஹரிணீசூரமாத்ரமான சர்மவிஷய ஸ்நேஹ மென்னவுமாம்" என்று. ஹரிணீசூரமாத்ரமான சருமமென்பதற்கு இன்னது பொருளென்று உலகமெல்லா முணரும். மானின்குளம்புக் கொப்பான சருமமாகிய அவயவவிசேஷம்—ஸ்த்ரீலிங்கம்; அதனை இங்குக் கால் என்னுஞ் சொல்லால் குறிப்பிட்டதாக உரைத்திட்டாராயிற்று. ஆழ்வார் திருவுள்ளம் பற்றின பொருளைத் தானே ஆசாரியர்கள் வியாக்கியானித்தருள்வர்கள். வழிப்போக்கர்களான பெண்டிர்களின் குறியைப் பேசுமாழ்வார் ஸாக்ஷாத்பகவானுடைய குறியைப் பேசினால் சேதமென்?

14. இன்னமுங் கேளீர்; மேலெடுத்தபாட்டுக்கு நாலாம் பாட்டாகிய *கொங்கைச்சிறுவரை யென்னும் பொதும்பினில் வீழ்ந்து வழுக்கி, ஆங்கோர் முழையினிற் புக்கிட்டு அழுந்திக் கிடந்துழல்வேனை * என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் "கொங்கை—முலை; சிறு வரை—சிற்றிடை; பொதும்பு—க்ராம்யமான அந்தஸ்ஸ்தானத்தைச் சொல்லுகிறார்..........விஷயப்ராவண்ய ஸ்தானம்" என்கிற

பங்க்திகளுள்ளன. ஹேயமும் ஹேயதமமுமான அவய வங்களைத் திருவுள்ளம் பற்றியே ஆழ்வார் இப்பாட்டிற் சொற்களைப் பெய்தாரென்று இசைய வேண்டிற்றாயிற்று. கண்ணபிரானுடைய குறி இப்படி ஹேயமன்றே. அதனைப் பாசுரந்தோறும் பேசினாலும் வாக்குபுனிதமாமே.

15. மற்றொன்றுங்கேளீர் ; பெரியாழ்வார் திரு மொழியிலேயே (4—5—5.) * மடிவழி வந்து நீர்ப்புலன் சோர * என்ற விதற்குப் பொருள் தெரியுமோ? "யமபட ரைக்கண்ட பயத்தாலே ஓர் இந்த்ரிய விசேஷத்தாலே ஜலம் ப்ரவஹிக்க" என்பது வியாக்கியான பங்க்தி. இங்கு ஓர் இந்த்ரிய விசேஷ மென்றது எது ? ஜல மென் றது எந்த ஜலம் ? தெரியுமோ ? மூலத்தில் மடி யென்று மறைத்துச் சொல்லப்பட்ட வஸ்து எது தெரியுமோ ? நெஞ்சால் நினைக்கவும் தகாத—ஸம்ஸாரிகளான அஸ்ம தாதிகளின் குறியையும் சிறு நீரையும் பேசியிருப்பதில் ஒரு விப்ரதிபத்தியுமில்லை; பரமபோக்ய ஸர்வாவயவனை ஸர்வேச்வரனுடைய *ஸர்வகந்தஸ் ஸர்வரஸ:* என்னும் படியான திருமேனியில் அவயவ விசேஷத்தையும் தீர்த் தவிசேஷத்தையும் வருணித்ததில் அநௌசித்யசங்கனம் ஆச்சரியமே.

16. திருவாய் மொழியில் (2—5—2) *திருவுடம்பு வான்சுடர்* என்ற பாட்டில் *ஒருவிடமு மெந்தை பெரு மாற்கரனேயோ* என்ற மூன்றாமடியின் பொருளை வல்லார் வாய்க் கேட்டுணரவேணும். ஈடுமுதலிய வியாக்கியான ங்களில்—"ஓரிடமென்னுதே ஒருவிடமென்கிறது, ஒருவுதல் —நீங்குதலாய், நீங்கினவிடமென்றபடி......தாமஸ தேவ தையிருப்பிடமாகையாலே நீங்கின விடமென்று அநாத ரோக்தி யிருக்கிறபடி." என்றுள்ளது. நீங்கின விடமாகக்

கொள்ளப்பட்ட விடம் எதுவென்பதை தத்வவித்துக்கள் பக்கலில் கேட்டுணர்க.

17. மற்றொன்றுங் கேண்மின் ; அல்குல் என்னுஞ் சொல் திவ்யப்பிரபந்தங்களிலும் பிறநூற்களிலும் பெரும் பாலுமுள்ளது. இச்சொல்லின் உண்மைப்பொருளை உலக மறியும். இடையென்னும் பொருளிலும் குறியென்னும் பொருளிலும் இதற்குப் பிரயோகமுள்ளது. * என்னல் குலேறி ஒரு முலையை வாய்மடுத்து * பூந்துகில் சேரல்குல்* இவை முதலான ஆழ்வார் பாசுரங்களில் இடுப்பென் னும் பொருளுள்ளது. * புற்றரவல்குல் புனமயிலே !* என்கிற திருப்பாவைப்பாவிலும் * மெலிவுற்ற வகலல்குல் போகமகள் * என்கிற திருவாய்மொழிப்பாவிலும் வியாக் கியான ஸ்ரீ ஸூக்திகள் எப்பொருளை நிலைநாட்டு கின்றன வென்பதை ப்ராமாணிகர்கள் உணர்வர்கள். மாணிக்க வாசகரியற்றிய திருக்கோவையாரில் * உணர்ந்தார்க் குணர்வரியோன்......மணந்தாழ்புரிகுழலாளல்குல்போல* என்றவிடத்து அல்குல் என்பது பெண் குறியையே பகர்வ தாக விவரணம் காட்டியுள்ளார்கள். ஆக இச்சொல் இடையைக்குறிப்பதும் மற்றொன்றைக் குறிப்பதுமாயிருத் தல் திவ்யப்ரபந்தங்களோடு இதர ப்ரபந்தங்களோடு வாசியற எங்குங் கண்டதாயிற்று. இதில் ஒருவர்க்கும் வெறுப்பில்லையே. அல்குலென்னுஞ் சொல் குஹ்யாவய வத்தைச் சொல்லுகிறதன்று என்றாலும் அவ்வவயவத்தின் அருகேயுள்ள தொரு பாகத்தைச் சொல்லுகிறதென்று வது இசைந்து தீரவேண்டுமே. அதைத்தான் ஏதுக்குச் சொல்லவேணும் ? அது புனிதமான இடமோ ? * என் னையும் நோக்கி யென்னல்குலும் நோக்கி ஏந்திளங்கொங் கையும் நோக்குகின்றார் * என்ற பெரிய திருமொழிப் பாசுரத்தின் வியாக்கியானத்திலே " மர்மஸ்தானம் "

என்றே ஸுஸ்பஷ்டமாகவருளிச் செய்தார் பெரியவாச் சான்பிள்ளை. நிற்க.

18. இனி *படிகொண்ட கீர்த்தியிராமாயணமென்னும் பத்தி வெள்ளம்* என்று கொண்டாடப்பட்ட பரம புனிதமான ஸ்ரீராமாயணத்திற் சிறிது செல்வோம்- அதில் கிஷ்கிந்தா காண்டத்தில் கார்காலம் கழிந்து சரற்காலம் புகுந்தமையைக் கூறுகின்ற வான்மீகி முனிவர் (ஸ—30, ச்லோ—28.) *ஜுயஹ்ஷி ஶரத்ஸ்ருஹூ: வுஷிநாமி ஶநெஶ நெஶ: । நவஸஂமஷவ஀஬ா: ஜவநாநீவ யொஷித:— தர்சயந்தி சரந்த்ய: புலிநாநி சனைச்சனை:, நவஸங்கம ஸவ்ரீடா: ஜகநாநீவ யோஷித:* என்றொருச்லோக மியற்றியுள்ளார். இது இளைய பெருமாளை நோக்கிப் பெருமாள் பணித்ததாகவுள்ளது. இதன் பொருள் யாதெனில்; சரற்காலநதிகள் மணல் மேடுகளை மெல்லமெல்லக் காட்டுகின்றன; லக்ஷ்மணா! இதற்கொரு உவமை தோன்றுகின்றதெனக்கு; சொல்லுகேன் கேளாய்; மாதர்கள் முதன் முதலாகப் புணர்ச்சிக்கு வருங்காலத்துத் தங்கள் அவயவ விசேஷத்தை ஸஹஸா காட்டிவிடமாட்டார்களே, மெல்ல மெல்லத்தானே காட்டுவர்கள், அதுபோலவாயிற்று இதுவும்—என்று. * தத் ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி* என்று உண்மைவரம் பெற்ற வான்மீகி முனிவர் இதைச் சொல்லும்போது இவ்வார்த்தை இராமபிரானது திருப்பவளத்தினின்று அவதரித்தே யன்றோ இருக்க வேணும்.

19. ஜிதேந்த்ரியரான பெருமாளுக்கு இவ்விஷயம் எங்ஙனே தெரிந்ததென்று சிலர் கேட்பர்கள்; நமக்குத் தோன்றுவதைத் தெரிவிப்போமிங்கு; மேலே யுத்தகாண்டத்தில் பெருமாள் வருணனை வழிவிடவேண்டிக் கடற்கரையில் ஒரு திருக்கையைத் தலையணையாக வைத்துக்

கொண்டு சயனித்தருளினு ரென்பதைச் சொல்லுமிடத்து, அந்தத் திருக்கைக்கு விசேஷணமிடுகிருர் வான்மீகி முனி வர் (21—3) ' ஸாமெஜெ: வரமநாரீணாஂ ஸஹஸ்ரைரநேகயா — புஜை: பரமநாரீணாம் அபிம்ருஷ்டம் அநேகதா * என்று. சிறந்த மாதர்கள் பலருடைய புஜங்களாலே பலகால் மர்த்தனம் செய்யப் பெற்றது ராமபாஹு என்கிறது இதில். உத்தரராம சரிதத்தில் பவபூதி மஹாகவி சொல்லுகிருன் இராமபிரான் தானே சொல்லுவதாக; *ஆவிவாஹ ஸமயாத் க்ருஹே வநே சைசவே ததநு யௌவநே புந:, ஸ்வாபஹேதுரநுபாச்ரித: அந்யயா ராமபாஹு:= ஸீதே! இதோ என் கையைத் தலையணையாக வைத்துக் கொள் : இந்தக் கை எப்படிப்பட்டது தெரியுமா? விவாஹமானது முதலாக க்ருஹத்திலோ வனத்திலோ, இளமையிலோ யௌவனத்திலோ நீதவிர வேறொருத்தி யால் தொடப் பெறுதது காண்—என்கிறது இந்த ச்லோ கத்தில். உண்மையில் இத்தகையதான ராமபாஹுவை * பரமநாரீணாம் புஜை: அநேகதா அபிம்ருஷ்டமாக எங்ஙனே சொல்லலாமென்னில்; ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளையே பரமநாரிகளாக இங்குச் சொல்லுகிறதென்று கோவிந் தராஜ ப்ரப்ருதிகள் உரை செய்திருக்கையாலே, மேலே காட்டின *ஜநகாநீவ யோஷித: * என்ற விடத்துள்ள யோஷித்துக்கள் [ஸ்த்ரீகள்] அந்த ஸ்ரீதேவி பூதேவி நீளா தேவிகளேயாதலால் ஒரு குறையுமில்லை — என்று சொல்ல லாம்.

20. மற்றும்சிலர் வேறுவகையாகவும் இங்கு ஸமாதானம் சொல்ல முன்வரக்கூடும். எங்ஙனே சொல் லிலு மின்பம் பயக்குமே. வஸிஷ்ட சிஷ்யனுய் வீண்வம்பு வார்த்தைகளில் சிறிதும் நெஞ்சு செல்லாதவனுன இராம பிரான் ஸந்தோஷமா யிருக்கும் ஸமயமன்றிக்கே * வெந்

துயர்க்கடலில் விழுந்தேன் * என்று பரிதாப முற்றிருக்கும் ஸமயத்தில் " நவஸங்கமஸவ்ரீடா : ஜகநாநீவ யோஷித: " என்று ஹேயத்ருஷ்டாந்தத்தையிட்டுச் சொல்லுவதும், அதனைப் * படி கொண்ட கீர்த்திராமாயண மென்னும் பத்தி வெள்ளத்தில் பொறித்து வைப்பதும் என்னே ! என்று ஏசப்பிறந்தவர்கள் திவ்யப்ரபந்தங்களிலும்* முத்தம் சண்ணம் மொட்டு ப்ரயோகங்களைப் பற்றி ஏசினால் * மனக்குற்றமாந்தர் பழிக்கில்புகழ் * என்ற கணக்கிலே இது புகழேயன்றிப் பழிப்பாகாதுகிடீர்.

21. அந்த ஸ்ரீராமாயணந்தன்னிலேயே (ஸுந்தர காண்டத்தில்) பிராட்டி தன்னிடம் வந்த திருவடியை நோக்கி * யாநி ராமஸ்ய சிஹ்நாநி லக்ஷ்மணஸ்யச வாநர, தாநி பூயஸ் ஸமாசக்ஷ்வ ந மாம் சோகஸ் ஸமாவிசேத். ............கதமூரு கதம் பாஹு லக்ஷ்மணஸ்ய ச சம்ஸ மே* என்று ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடைய திருமேனியடையாளங்களையெல்லாம் தெரியச் சொல்லவேணும், துடை முதலிய அந்தரங்க வுறுப்புகளின் ஸந்நிவேசம் பற்றியும் சொல்லவேணும் என்ன, 'தேவரீர் கேட்டபடியே சொல்லுகிறேன் கேளீர்' என்று சொல்லத் தொடங்கின திருவடி (35—17.) த்ரிஸ்திரஸ் த்ரிப்ரலம்பச் ச த்ரிஸமஸ் த்ரிஷு சோந்நத: * இத்யாதிகள் சொல்லியிருப்பதைக் காண்கிறோம். இவற்றுக்கு ஸ்ரீ கோவிந்தராஜாதிகள் கூசாது காட்டியிருக்கும் விவரணம் மறைக்க முடியாதது. இராமனுடைய குஹ்யாவயவங்களைப் பற்றின பேச்சுக்களும் தாராளமாக வந்திருக்கின்றன. த்ரிப்ரலம்ப: என்பதற்கு மூன்று உறுப்புகள் நீண்டிருப்பவன் என்று பொருள்; புருவமும் பாஹுவும் வ்ருஷணமும் நீண்டிருப்பவன்; (அல்லது) ஆண்குறியும் இரண்டு கைகளும் நீண்டிருப்பவன் என்று பொருளென ப்ரமாணங்களுடன் விவரித்

துள்ளார் கோவிந்தராஜர். இவ்விஷயத்தை எடுத்துச் சொல்லுபவனோ நித்ய ப்ரஹ்மசாரியான திருவடி. கேட்பவளோ மாதர்க்குயர்ந்தமைதிலி. ஒரு ஜிதேந்த்ரியன் ஒரு பெண்ணரசியினிடத்தில் புல்லிங்க பரிமாணங்களை எப்படி கூறினான்? அவள்தான் எப்படி கேட்டுக்கொண்டிருந்தாள்? இதையெல்லாம் கேட்ட பிராட்டி பரமானந்தமடைந்து ஆனந்தக்கண்ணீர் பெருக்கினதாகவும் (35-85.) சொல்லப்பட்டுளது. * பிதாமஹஸ்யாபி பிதாமஹாய * என்கிற தனியன்படி திருமலைநம்பிபக்கலில் ஓராண்டு வாழ்ந்து ஸ்ரீராமாயண மஹார்த்தங்களை விரிவாகக் கேட்டருளின ஸ்வாமி பாஷ்யகாரர் இவ்வடையாளங்களைப்பற்றின விரிவுகளையும் உபதேசமுறையில் தாம் கேட்டுத் தரித்தும் தமர்களுக்கு உபதேசித்துமிருக்கவேண்டுமே. இதில் அருவருப்பொன்று மில்லையெனின், ஸ்ரீ க்ருஷ்ணசிசுவின் ஸர்வஜநத்ருச்யமாய் ஸர்வஜநமனோஹாரியான திவ்யாவயவ விசேஷத்தைப்பற்றித் தாயான யசோதை அமுதினுமாற்ற வினிய சொற்களாலே சொன்னாளாகில் 'எல்லே! ஈதென்ன வினிமை!' என்று உள்குழையவன்றோ ப்ராப்தம்.

22. திருவிருத்தத்தில் (7)*ஞாலம் பனிப்பச்செறித்து நன்னீரிட்டுக் கால்சிதைந்து நீலவல்லேறு பொராநின்ற வானமிது * என்ற பாட்டின் பொருளைச் சிறிது உணரவேணும். காலமயக்குத்துறையில் அமைந்தது இப்பாசுரம். தலைவியோடு கூடியிருந்த தலைவன் ஒருகாரியப்பாடாகத் தேசாந்தரஞ் செல்லவேண்டிக் கார்காலத்திலே திரும்பி வருவதாகக் காலங் குறித்துப் பிரிந்து சென்று அக்கார்காலம் வந்தவளவிலும் தான் வாராதிருக்க, கார்காலவரவையும் காதலன் வாராமையையும் நோக்கி வருந்துகின்ற தலைவியைத் தோழியானவள் 'நங்காய்! நீ என்

வீணே வருந்துகிறாய்! மெய்யே கார்காலம் வந்தா லன்றோ காதலன் வந்திடுவான்? அவன் சொன்ன கார்கா லம் வரவில்லை; கார்காலமன்றாகில் இதோ மழை பெய் கின்றதே, இதுவென்? என்று கேட்கிறாயோ, வானத்தில் நெருங்கி நீர் சொரிபவை மேகங்களல்ல; இரண்டு கரிய காளைகளுக்குப் பரஸ்பரம் பகையுண்டாகி அவை நிலத் தினின்று மேலேயேறி ஒன்றோடொன்று நெருங்கிப் போர் செய்கின்றன; அவற்றைக்கண்டு நீ மேகமாக மயங்குகிறாயத்தனை; அவை கரிய காளைகளேயன்றி மேகங்களல்ல; பெய்கின்றது மழைநீரன்று; அக்காளைக ளின் வியர்வை நீரும் மூத்திர நீரும் பெருகுவதைக்கண்டு மழைநீராக மயங்குகிறாயத்தனை' என்று சொல்லித் தலை வியை ஒருவாறு ஆற்றுகின்றாள் என்பது இப்பாசுரத்தின் தாற்பரியம். மூலத்தில் நன்னீரிட்டு என்றுள்ளது. உண் மையில் மழைநீர்தான் பெருகுகின்றது; அதை இல்லை செய்து இரண்டு காளைகளின் நீராகக் கூறுகின்றாள். பசு வின் நீராகக் கூறினுலாவது * ஆனின்மேய ஐந்துநீ அவற்றுள் நின்றதூய்மைநீ * என்று திருமழிசையார் பாசுரப்படி பாவனமான கோமயத்தைச் சொல்லிற் றாகக் கொள்ளலாம். ஹேயமான எருதுகளின் மூத்திரம் இங்குப் பேசப் பட்டிருக்கின்றது. பெரியாழ்வார் திரு மொழியினும் மிகச்சிறந்த நம்மாழ்வாரது பிரதம ப்ரபந் தத்தில் இது பேசப்பட்டுள்ளது. இதில் ஒரு அவத்ய சங்கையும் செய்வாரில்லை. கங்கையிற் புனிதமாய கண் ணபிரானது சிறுச்சண்ண நன்னீரைப் பேசினதால் மஹத்தான அவத்யமாகு மென்பாரைப் பற்றி என்சொல் லவல்லேனென்வாய்கொண்டே.

23. திவ்யதேஜோமயமாய் அப்ராக்ருதமான பக வத் திவ்யமங்கள விக்ரஹத்தில் ஹேயமான மூத்திர

யிருப்பதாகச் சொல்லுவது மஹாபசாரமென்று சிலர் கூறுவதானது செவியேற்கவுங்ககாதது. ஹேயமான மூத்திரமிருப்பதாக யாருஞ் சொல்லவில்லை; கங்கையிற்புனிதமாய திவ்யதீர்த்தமே ஆசமநாதிகளுக்கும் அர்ஹமானதே சிறுச் சண்ணத்தினின்று துளிப்பதாகப் பெரியாழ்வார் ஸஹ்ருதயமாகப் பேசுகின்றார். ஸ்ரீராமக்ருஷ்ணாதிகளின் திருமேனியை ப்ராக்ருதமென்பார் யாருமிலர்; அப்ராக்ருதமே. * ப்ராக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாமி * என்கிற கீதையையும், * ஆதியஞ்சோதி யுருவை அங்கு வைத்திங்குப் பிறந்த * என்ற திருவாய்மொழிப்பாவின் பொருளையும் உள்ளபடியறிந்திருக்குமவர்கள் ஸ்ரீராமக்ருஷ்ணாதிகளின் திருமேனிகளில் ப்ராக்ருதத்வசங்கையைக் கனவிலுங் கொள்ளார். உண்பது உறங்குவது அழுவது சிரிப்பது அஞ்சுவது அடிப்பது அடியுண்பது மூர்ச்சிப்பது முனிவது முதலான செயல்களை மனுஷ்ய நிர்விசேஷமாகக் கொண்ட விபவாவதாரத் திருமூர்த்திகள் ப்ராக்ருதர்களாலே ப்ராக்ருதமாகவே கருதக் கூடியதாயிருந்தது. இதை நம்மாழ்வார் திருவாய்மொழியில் (2—5—8) * சிறுமனிசர் உவலையாக்கை நிலையெய்தி* என்று வெட்ட வெளிச்சமாக அருளிச் செய்துள்ளாரே. இவ்விடத்தில் ஈட்டு ஸ்ரீ ஸூக்தி காண்மின்;—"க்ஷுத்ரரான மநுஷ்யர்களுடைய ஹேயமான சரீரத்தினுடைய நிலையை அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தானத்துக்கு உண்டாக்கிக்கொண்டுவந்தாயிற்று..." என்று. ஆகவே, திருமேனி அப்ராக்ருதமாயிருந்தும் ப்ராக்ருத ஸஜாதீயமானதுபோல, மூத்ரோத்ஸர்ஜநாதிகளும் ப்ராக்ருத ஸஜாதீயமாகவுண்டாயினவென்று கொள்ளக் குறையில்லை. இவையொன்றுமில்லை யென்னில், * அரவணையாயாயரேறே அம்மமுண்ணத் துயிலெழாயே * என்றெழுப்பி அம்மமூட்டினதுமில்லை; *ஒரு முலையை வாய்மடுத்தொருமுலையை நெருடிக்

கொண்டு இரு முலையும் முறை முறையா ஏங்கி யேங்கி யிருந்துணேயே * என்று வேண்டி முலையூட்டினதுமில்லை என்றே சொல்லித்தீரவேண்டும். "கண்ணனவதரித் ததுமில்லை, இராமனவதரித்துமில்லை; ஏதோ கட்டுக் கதை" என்பார் வாதத்திலேயே வந்து நிற்கவேண்டும்.

24. இதற்குமேல் சிலர் ஒன்று சொல்லக்கூடும்; ஸ்ரீ ராமக்ருஷ்ணாதிகளுக்கு மூத்ரோத்ஸர்ஜநாதிகள் இல்லையென்று நாம் சொல்லவில்லை; உண்டானாலும் ஹேயங்களான வவற்றைப் பரம பக்தர்கள் பேசலாகாது என்கிறோம்—என்று. இதற்குங்கேண்மின்; ஆழ்வான் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் "தாவகம் ரம்யமத்புதம் அதிப்ரியங்கரம்" என்றருளிச்செய்த கணக்கிலே எம்பெருமானுடைய ஸம்பந்தம் பெற்றது எதுவும் பரமோத்தேச்யமே என்று கொள்ளக்கடவவர்கள் இங்ஙனே சொல்லப் பெறார்கள்.

25. நம்மாழ்வாருடைய அநுபவங்களில் பரம விலக்ஷணமான வோர் அநுபவத்தைக் கேண்மின்; *வளவேழுலகுபதிகத்தில் *உண்டாயுலகேழ் முன்னமே......... மண்டான் சோர்ந்ததுண்டேனும் மனிசர்க்காகும் பீர் சிறிது மண்டாவண்ணம் மண்கரைய நெய்யூண் மருந்தோ மாயோனே!* என்கிற பாசுரத்தையநுபவிக்க அந்தோ! அதிகாரிகள் யாவர்? மனிதர்கள் விரேசனங்கொள்வதென்று ஒன்றுண்டு; அதாவது, தேஹத்திற் குள்ளிருக்கும் கச்மலங்களைப் போக்க எண்ணெ யுட்கொள்வது. இந்த விரேசநப்ரயோகத்தைக் கண்ணபிரான் தானும் செய்து கொண்டதாக ஆழ்வாரிடம் சொல்லிக் கொண்டானாம்; அதற்கு ஆழ்வார், மாயோனே! என்றாராம்; அப்பா! என்ன மாயம் பேசுகிறாய்? என்றவாறு. இங்கு விவரிக்க வேண்டியதை விரிவுக்கஞ்சி விடுத்தோம்; ஈட்டிலும் நம்முடைய திவ்யார்த்த தீபிகையிலும் விரிவுகாண்க. இது

வொரு ஆச்சரியமான அநுபவம். இவ்வநுபவங்களுக்கு இட்டுப்பிறவாதவர்கள் எது சொல்லிலென்? எது செய்யி லென்? கண்ணனை நீராட்டிப் பூச்சூட்டிக் காப்பிட்ட யசோதை மாந்தேண்ணெயும் போட்டின ளென்பதில் ஐயமுண்டோ ?

26. வேதாந்த தேசிகன் யாதவாப்யுதய காவ்யத்தில் (4—64.) *ஷிஜொஹநெ வஜ்ஜவமெஷிநீநாஂ நவஜ்ஹ அய-ஒஂ ஸிஷிதெ தநீயழ—ஷிமோஹநே வல்லவகேஷிநீநாம் ந ப்ர ஹ்ம சர்யம் பிபிதே ததீயம்* என்னும் ச்லோகத்திலைல், கண்ணன் ஆயர்சிறுமியரோடு ஸம்போகம் செய்திருந் தாலும் அதனல் அவனுடைய ப்ரஹ்மசர்யம் கெடவில்லை என்று உபபத்தியுடன கூறியுள்ளார். இவ்விடத்து வியாக் யானத்தில் அப்பய தீக்ஷிதர் விரிவாகப் பல விஷயங் களுரைக்கிறுர்; கண்ணன் கோபிகளோடு ரமித்தானென்று சொல்லிவைத்து ப்ரஹ்ம சர்யம் கெடவில்லையென்றல் இது பொருந்துமோ? என்று சங்கித்துக்கொண்டு ஸமா தான மெழுதிக்கொண்டு போகையில் “ ஹாமவதெ * கூத நூவாஜ்வொளா தஃ* உசி தவஷ்ஜெஷிகாவஂஹொஜெ வியஒமிஜொயொக்ஷ: ” என்றெழுதியுள்ளார். இந்த்ரிய ஸ்கலநமாகாதபடி கண்ணன் தன்னில் தடைசெய்து கொண்டதாக ஸ்ரீ பாகவதத்தில் சொல்லப்பட்டுளதென்று ப்ரமாணமெடுத்துக் காட்டியுள்ளார். ப்ரஹ்மசர்யஹா நிகரமான இந்த்ரியமே கண்ணனது திருமேனியில் கிடையாதென்று ஒரேவார்த்தையில் முடித்துவிடலாமா யிருக்க, அந்த வழியிற் செல்லாது இந்த்ரிய நிரோதம் செய்திட்டதாகச் சொல்லுவது ப்ரமாண பாரதந்த்ர்யத் தாலிறே.

27. *உண்ட முலைப்பால் அறுகண்டாயுறங்கா விடில்* என்று யசோதை கூறுவதாகவும் பெரியாழ்வா

ராருளிச் செய்கிறார். கண்ணன் உறங்காவிடில் பருகின முலைப்பால் ஜரிக்காது என்பதே இதன் பொருள். அஜீரணத்தினால் நம்போல்வார்க்கு என்ன விளைந்திடுமோ அத கண்ணனுக்கும் விளைந்திடுமென்கிறாளென்க. இத னால், விபவாவதாரத் திருமேனி அர்ச்சாவதார திவ்ய விக்ரஹம்போலன்று என்றும், தேஹதர்மங்களெல்லாவற் றையுமுடைய தாகவே காட்டப்பெற்றிருந்ததென்றும் தெரிவித்ததாயிற்று.

28. முத்தம் சண்ணம் மொட்டு என்னுமிச் சொற் களுக்கு இவ்வர்த்தம் தவிர வேறு பொருள் ஸம்பவிப்பதா யிருந்தால் அதைச் சொல்லலாமன்றோ வென்று சிலர் வாதிக்கக்கூடும். கேண்மின்; வேறுவகையான பொருள் ஸம்பாவிதமேயன்று; மூலவக்தாவான ஆழ்வார்க்கும், வியாக்கியான கர்த்தாக்களான பூருவாசாரியர்களுக்கும் சிறிதும் உடன்பாடல்லாத வேறு பொருளை வலிந்துவலிந்து ஏறிடப் பார்த்தாலும் ஏறாது, ஏலாது. முத்தம் சண் ணம் முதலிய சொற்களை ஆண்குறிக்கு வாசகமாக வேறு யாரும் எந்த நூலிலும் பிரயோகித்ததாகத் தெரியாமை யால் இப்பொருள் கொள்ள நியாயமில்லை யென்றொரு வாதம் எழலாம். அம்மம் என்கிற சொல் முலைப்பாலுக்கு வாசகமாகப் பெரியாழ்வாராலும் திருமங்கை யாழ்வாரா லும் அடுத்தடுத்துப் பிரயோகிக்கப்பட்டுளது. * அம்ம முண்ணத் துயிலெழாயே *உனக்கஞ்சுவன் அம்மந்தரவே* இத்யாதிகள் பெரியாழ்வாரது பிரயோகங்கள். * என் னம்மம் சேமமுண்ணாயே * அம்மமுகந்தினி துண்ண நீவாராய்* இத்யாதிகள் திருமங்கை மன்னனது பிரயோ கங்கள். இச்சொல் நாம் ஆராய்ந்து பார்த்த வரையில் பிறநூல்களிற் காணப்படவில்லை. இவ்வாழ்வார்களது பிரயோகத்தைப் பார்த்துப் பிறர் சிலரும் பிரயோகித்திருப்

பினுமிருக்க. சிறு குழந்தைகளின் வழக்கையநுஸரித்து வந்த பிரயோகமிது. [சாச்சி, பாச்சி, மாமு, மம்மு, புவ்வா, பாப்பம் என்பன போல.] இதுபோலவே முத்தம் சண்ணமென்பனவும் குழந்தைகளின்•குறியைத் தாய்மார் முதலானோர் வழங்கி வந்த படியை யநுஸரித்துச் செய்த பிரயோகங்களே. குஞ்சு என்பது மிப்படியே.

29. இவை ஸர்வாத்மநா இடு குறிப் பெயர்களல்ல. காரணப் பெயர்களே. வடமொழியில் குறிக்கு வாசகமாக ப்ரஸித்தமான மேட்ரம், மேஹநம் என்னும் சொற்கள் மூத்திரம் பெய்வதை மூலமாகக் கொண்டே தோன்றியவை யென்பதை வடமொழிப் பயிற்சியுடையாரறிவர். நமது வேதத்தில் ஏழாவது காண்டத்தில் *யந் மேஹதி தஸ்மை ஸ்வாஹா* என்றதுங் காண்க. மேஹநம் என்று மூத்திரத்திற்குப் பெயராய் லக்ஷணயா குறியைச் சொல்லுகிற தென்றலுமொன்று. அதுபோல மூத்ர மென்னுஞ் சொல்லே முத்தமெனத் திரிந்ததென்பர் பலர். சிசுக்களின் குறியை ப்ரேம பாரவச்யத்தினால் முத்தமிடுதலை மக்கள் பெறாத மலடர்களுங்கூட இற்றைக்கும் எற்றைக்கும் நன்கறிவர்களாதலால் அது காரணமாகவே முத்தமென வழங்கப் பெற்றதென்பர் நுண்ணறிவாளர். சண்ண மென்னுஞ் சொல்லின் தத்துவத்தை முன்னமே விவரித்துரைத்தாயிற்று. மொட்டு என்னுஞ் சொல் உருவகவுயர்வுநவிற்சியணி யென்று தமிழிலும், ரூபகாதிசயோக்தியென்று ஸம்ஸ்க்ருதத்திலும் வழங்குமலங்கார மரியாதையில் குறியைத் தெரிவிப்பதாமென்பதே அச்சொல்லின் உண்மை யென்றும் கீழே விவரித்தோம்.

30. ஆக, இத்தனை யுபபத்திகளையும், இவற்றுக்கிணங்கவே அவதரித்துள்ளபூர்வாசார்ய வியாக்கியானங்

களையும் மதியாது மனம்போனபோக்காகச் சிலர் சிறிது மேலாத பொருள்களை ஏற்றியுரைக்க முன் வந்தால் வருக வருக வருக. அதனால் பூருவாசார்ய வியாக்கியானங்களுக்கு ஒரு குறையுமில்லையாகும். ஒன்று பாருங்கள்; திருவாய்மொழியில் (4—4—7.) *நீறு செவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும்* என்ற விடத்துள்ள நீறு என்னுஞ் சொல்லுக்கு பஸ்மமென்னும் பொருளை ஆறுயிரப்படி முதலான எல்லாப்படிகளிலும் கைகொள்ளனியாகக் காட்டியிருக்கவும், 'அப்பொருள் அஸம்பாவிதம்; வேறு உண்மைப் பொருள் கேளீர்' என்று சிலர் தங்கட்குத் தோன்றும் பொருளை எழுதிவைப்பாருமுளர். இங்ஙனே பல விடங்களிற் பல விஷயங்கள் காட்டத்தக்கவையுள்ளன. அங்ஙனே சிலர் வேறு பொருள் கூறினால் கூறட்டுமே. மருளினாலோ பிடிவாதத்தினாலோ ஒரு விதத்திலும் ஏலாத பொருளையே ஏறிட்டுரைக்கப் புகுந்து பரிஹாஸ்யராகின்றனரென்கிற தத்துவத்தை யாரே அறியகிலார்.

31. *பெருநீர்த்திரை யெழுகங்கையிலும் பெரியதோர் தீர்த்தபலந்தருநீர்* என்றவிடத்து நீர் என்பதற்கு ஜலமென்னும் பொருளையே கொள்ளவேணு மென்கிற நிர்ப்பந்தமில்லை. திருவிருத்தம் இரண்டாவது பாட்டில் "தொழுநீரிணையடிக்கே" என்ற விடத்து 'தொழும்படியான நீர்மையையுடைய இணையடிக்கு' என்று பொருள் கொள்வதுபோலவும் இங்ஙனே பல்லாயிரமிடங்களிற் கொள்வது போலவும் இங்கும் 'பெரியதோர் தீர்த்தபலந் தரும்படியான நீர்மையை[ஸ்வபாவத்தை]யுடைய' என்று பொருள்கொள்வதும் சிறக்கும். [நீர்மையென்கிற பண்புப் பெயரில் மைவிகுதி கெட்டுப் புணர்ந்தபடி.] இப்படி கொள்ளலாமாயினும் பூருவாசாரியர்களின் வியாக்கியா

ணம் இப்படியில்லை ; "அத்விதீயமான தீர்த்த பலத்தைத் தரும் ஜலத்தையுடைத்தான சிறுச்சண்ணமானது" என்று மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி விளங்கா நின்றமையால் இதை மறுத்து வேறு வகையான பொருள் காட்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவசியமொன்றுமில்லை யென்க.

32. * மயர்வற மதிநலமருளப்பெற்ற நம்முடைய ஆழ்வார்களோடொத்த ஞானப்பெருமை வாய்ந்த நம் பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களில் பகையும் பொருமையுங் கொண்ட அவ்யபதேச்யர்களோடு உறவு கொண்டு அன்னவர்கள் ஊஹிக்கும் பாடபேதங்களையும் வலாப்பொருள்களையும் ஆதரித்துக் கூசாமல் தம் பெயரால் வெளியிட்டுக் கொண்டு பூர்வாசாரியர்கள் பக்கலில் பக்தி பாவனை காட்டுமவர்கள் எது எழுதினலும் ஸதாசார்ய கடாக்ஷம் பெற்ற ஸத்ஸம்ப்ரதாயரஸிகர்கள் நிலைகலங் கார்களென்று இவ்வளவோடு நிற்போமிப்போது.

---

ஸ்ரீ:

# புஸ்தக விமர்சநம்

சொற்பொருள்களின் விமர்சனம் செய்வதென்பது விமர்சசக்தி வாய்ந்த விவேகிகளுக்குற்றது. சொற்களின் உண்மைஸ்வரூபங்களையும் பொருள்களின் சிறப்புகளையும் நேர்வழி நின்று நிரூபித்தல் உலகுக்குப் பேருதவியளிக்கும் ; ரஸிகர்களுக்குப் பரமானந்தம் பயக்கும். அப்படிச் செய்யும் நிரூபணங்களில் பிறரை நிந்திக்கும் நோக்கம் சிறிதுமின்றிக்கே, தாங்கள் கண்ட நற்பொருள்களை மாத்திரம் ஆணியடித்தாற்போல் அசைக்க முடியாமல் ஸுப்ரதிஷ்டிதமாம்படி எழுதிவைப்பதுதான் நன்னெறி யாகும். கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தவாறே

கனவிருள் அகல்வதைக் காணுகின்றோம். அதுபோல, நற் பொருள்கள் நன்கு நிரூபிக்கப்பட்டவாறே தீய பொருள் கள் தன்னடையே தேய்ந்து மாய்ந்து சிதைந்தொழியுமாத லால் "இன்னார் இங்ஙனே தப்புப் பொருள் கூறினார், அது பிசகு; அவர் மூர்க்கர்..." என்று தொடங்கி வீணான நிந்தைகளைப் பெய்து ஆர்ப்பாட்டங்களோ ஆடம்பரங் களோ செய்வது சதுரர்களும் ப்ராமாணிகர்களுமானவர் கட்கு உற்றதன்று. எந்த நூலில் நிந்தைகளும் ஏளனங் களும் பரிஹாஸங்களும் ஸ்தோபங்களும் தலை காட்டுகின்ற னவோ அந்த நூலில் வித்வான்கள் உகக்கக் கூடிய விஷயம் சிறிது மிராதென்பது திண்ணம். சில வ்யக்திகளை ஆசைதீர நிந்திக்கைக்காகவே ஏதோ விஷய விசாரமென்று வியாஜ மிட்டுக்கொண்டு எழுத எழுகின்றதாக நிச்சயிக்கலாம்.

மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்திகளில் பரிசய மும் அவகாஹனமு முள்ளார்க்கு தத்வார்த்த நிரூபணங் களில் ஹேளனமும் நிந்தனையும் சிறிதும் தலைகாட்ட நியாய மில்லை. "முத்தம் சண்ணம் மொட்டு என்னும் சொற் பொருள் விளக்கம்" என்றொரு புத்தகம் நமது பார்வைக்கு வந்தது. இதனை இயற்றியவர் ஸ்ரீ.உ.வே. தி. ஈ ஸ்ரீநிவாஸ ராகவாசாரியர். வயோவ்ருத்தரும் ஞானவிருத்தரும் சீல விருத்தருமான இந்த ஸ்வாமி *அபகதமதமாநை: அந்திமோ பாயநிஷ்டை: அதிகதபரமார்த்தை: அர்த்தகாமாநபேக்ஷை:, நிகிலஜந ஸுஹ்ருத்பி: நிர்ஜிதக்ரோதலோபை: * என்னும் ஆச்சர்யமான விசேஷணங்களுக்கு இட்டுப் பிறந்து வைத் தும் வீணாகவே காமக்ரோத அஸூயா மாத்ஸர்யாதிகளை ஏறிட்டுக்கொண்டு வழியல்லா வழியில் இனைய புன் சொற் களைக் கொட்டியிருக்கிறாரே! ஐயோ! இந்த சபல ப்ரவ் ருத்தி எதற்கு? இதனால் என்ன ஸாதித்ததாகும்? *வயவஃ கஉஉணொாயஉவஸ் ஹு-ஆவஸ்ாஹிஜநவஸ்அ, வெஷவாஹுரதி

ஸாரவேத்ரா ஆரநு விதுரெதிஹ—வயஸ: கர்மணோர்த் தஸ்ய ச்ருதஸ்ய அபிஜநஸ்யச, வேஷவாக்வ் ருத்திஸாரூப்ய மாசரந் விசரேதிஹ * என்கிற ஸுபாஷிதம் எவர்க்கும் எப்போதும் நினைவிலிருக்கவேணுமே. வயதுக்குத்தருந்த செயலும் சொலவும் இல்லையே யென்று மிக மிக வருந்த வேண்டியதாயிற்று. நிந்தாபரிஹாஸங்களில் சிறிதும் கண் செலுத்தாமல் விவேகிகள் உகக்கும்படியான வழியில் விஷ யங்களை மாத்திரம் விளக்கி உண்மைப் பொருளை வெளி யிடுவோ மென்றெண்ணி "முத்தம் சண்ணம் மோட்டு மெய்ப்போருள்" என்னும் வியாஸத்தை யெழுதி வெளியிட் டிருக்கிறோமிங்கு.

திவ்ய ஸூக்திகளில் அர்த்த நிர்ணயம் பண்ண வேண்டியது அவசியமே. நாம் எழுதியவற்றில் குற்றங் குறைகள் இருக்குமாகில் அவற்றை நேர்வழியில் பிரமாண உபபத்தி களுடன் தெரிவித்து நம்மை யீடு படுத்திக் கொள்ளலாம். விஷயங் களைவிட்டு வீண்வம்புப் பேச்சுக ளெத்தனையெழுதினும் *கிரயோ வர்ஷதாராபிர் ஹந்யமாநா ந வ்யதந்தி: * என்பதே நமது நிலைமையாம். (ப்ர. அ.)

---

குறிப்பு:—ஈச்சம்பாடி ஸ்வாமியின் புத்தகத்தில் கப் யாஸச்ருதியைப் பற்றியும் புண்டரீக சப்தார்த்தத்தைப் பற்றியும் அவசியமற்ற வீணான ப்ரஸங்கம் (பக்கம் 15-ல்) காணப்படுகிறது. அவை பெரிய வித்வான்கள் விமர் சிக்கவேண்டிய விஷயங்களாதலால் ஸ்ரீராமாநுஜ பத்ரிகை 25-ல் நம் ஸ்வாமி ப்ரமாணோபபத்திகளுடன் விசதமாக எழுதியுள்ள இரண்டு வியாஸங்களும் பிராமாணிக வுலகுக் குப் பயன்படு மென்று அவையும் இங்குச் சேர்க்கப்படு கின்றன. (பதிப்பாசிரியர்.)

# எம்பெருமானும்-கப்யாஸ ச்ருதியும்

(ப்ர. அ. ஸ்வாமி.)

ஸ்வாமி ராமாநுஜர் யாதவப்ரகாசனிடம் வேதாந்த ச்ரவணம் பண்ணிக் கொண்டிருக்கையில் ஒருநாள் அந்த குருவுக்கு அப்யஞ்ஜநம் [எண்ணெய் தேய்த்தல்] செய்து கொண்டிருக்க * தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ * என்கிற உபநிஷத்வாக்யத்திற்கு அவன் அநுசிதமான அர்த்தஞ் சொன்னதாகவும், அது கேட்டு ஸ்வாமிக்கு அஸஹ்யமான சோகமுண்டாய்க் கண்ணீர் பெருக, அது அவன் துடையைச்சுட, அவனும் ஸ்வாமியின் திருமுகமண்டலத்தை யுற்றுநோக்கி 'உமக்கு இப்படி சோகமுண்டானதேன்?' என்று கேட்க, ஸ்வாமி அந்த உபநிஷத்வாக்யத்தின் உண்மைப்பொருளை யெடுத்துரைத்து இப்படிப்பட்ட அழகிய நற்பொருளிருக்க, ஹேயமான அர்த்தம் சொல்லக் கேட்கையாலே சோக முண்டாயிற்றென்று விடை கூறினதாகவும், யாதவ ப்ரகாசன் அது கேட்டுக் குபிதனாய் ''நான் சொன்னபடி கேட்கில் வாசித்திரும், இல்லாவிடில் விட்டுப் போம்' என்று சொன்னதாகவும் அப்போது ஸ்வாமி அவனிடமிருந்து விலகிக்கொண்டதாகவும் குருபரம்பரா ப்ரபாவாதிகளில் இதிஹாஸங்காண்கிறோம். கருடவாஹந பண்டிதரியற்றிய திவ்யஸூரி சரிதத்திலும் பதினேழாவது ஸர்க்கத்தில் 32, 33, 34 ஆகிய மூன்று ச்லோகங்களினால் இவ்விஷயம் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆனால் கப்யாஸச்ருதிக்கு அபார்த்தம் சொன்னதாக விசேஷித்து அங்கு எடுத்துக் காட்டப்படவில்லை.

ஸ்வாமிக்கு சோகாச்ரு பெருகும் படியாக யாதவர் என்ன அபார்த்தம் சொல்லிவிட்டாரென்று விமர்சிப்போம்.

கப்யாஸ மென்பதற்கு கபியின் ஆஸ மென்று கொண்டு [அதாவது, மாக்கடப்ருஷ்ட மென்று கொண்டு] பொருள் சொன்னதாகவும் இப்படி நிஹீநோபமை சொல்வது கூடா தாகையால் ஸ்வாமிக்கு சோக முண்டாயிற்றென்றும் தெரியவருகிறது. இங்கே வக்தவ்யாம்சங்கள் பலவுண்டு. கேண்மின். மாக்கடப்ருஷ்ட மென்கிற பொருளை யாதவ ப்ரகாசர் தாமே கல்பனை செய்து சொன்னாரா? அல்லது அவர்க்கு முன்னே யாராகிலும் சொல்லியிருக்கிறார்களா? என்று பார்க்கவேண்டும். அன்றியும் மாக்கட ப்ருஷ்டத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கே உவமையாகச் சொன்னார்களா, அல்லது அதைப் புண்டரீகத்திலே அந்வ யித்து மாக்கடப்ருஷ்டம் போன்றதான யாதொரு புண்ட ரீகமுண்டோ, அதற்கொப்பான திருக்கண்கள் என்று பொருள் கொண்டார்களா? என்றும் விமர்சிக்கவேண்டும்.

மாக்கட ப்ருஷ்டமென்கிற பொருள் சங்கராசார்ய ரெழுதிவைத்தா ரென்றும் அவரைப் பின்பற்றி யாதவர் சொன்னாரென்றும் சிலர் கூறுவது ஒருகரந்தத்தையும் நோக்கப்பட அறியாமையினாலாயது. *பகவத்போதாயனக்ருதாம் விஸ் தீர்ணாம் ப்ரஹ்ம ஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சி க்ஷிபு:* என்ற ஸ்ரீபாஷ்ய ஸூக்தியில் பூர்வாசார்ய பதத்தி னால் விவக்ஷிதராக ச்ருதப்ரகாசிகாசார்யரால் கர்ட்டப்பட் டுள்ள த்ரமிடபாஷ்யகாரரே இவ்வாக்யத்தை எழுதியிருப்ப தாக ச்ருதப்ரகாசிகாபட்டரும் வேதாந்த தேசிகனும் மற் றும் பலரும் எழுதியுள்ளார்கள். *தஸ்ய யதா கப்யாஸ மித்யாதி ச்ருதிவாக்யத்திற்கு அவர் ஆறு அர்த்தங்கள் எழுதி வைத்திருப்பதாகவும் அந்த ஆறு அர்த்தங்களையும் அவர் அவிசேஷமாகவே யெழுதிவைத்திருந்தாலும் முதல் மூன்று அர்த்தங்களைப் பூர்வபக்ஷார்த்தங்களாகவும் பின்மூன்று அர்த்தங்களை ஸித்தாந்தார்த்தங்களாகவும் கொள்ளவேணு

மென்று *அந்தஸ் தத்தர்மோபதேசாத்* என்ற ஸூத்ரத்தின் கீழ் ச்ருதப்ரகாசிகாசார்யர் எழுதியுள்ளார். (இவரே) வேதார்த்த ஸங்க்ரஹ தாத்பர்ய தீபிகையிலும் இங்ஙனமே யெழுதியுள்ளார். தேசிகன் ஸ்தோத்ரபாஷ்யத்தில் [க: புண்டரீகநயந:] என்றவிடத்தில் "யஞ்ஞவி ஜூம்பஹாஷ்ஷு * தவெஷ்யயா கவஷ்ரவஸ் ஶிதஷாஷெ: ஷஸ்யஷா: வெஷாக்ஷா: கயாவி ஔஶிதஷாக ஷூயணவ ஷீகதஷ்வஷா:" என்று ஸாதித்திருக்கிருர். ஆக, மர்க்கடப்ருஷ்ட மென்கிற அர்த்தத்தையும் த்ரமிட பாஷ்யகாரரே எழுதிவைத் திருப்பதாகவும், அந்த அர்த்தத்தை அவர் பூர்வ பக்ஷார்த்தமாக எழுதியிராமற் போனுலும் அர்த்தஸ்வபாவத்தைக் கொண்டு பூர்வ பக்ஷார்த்த மாகவே நாம் கொள்ளவேணு மென்றும் எழுதியுள்ள விதனல் என்ன தேறுகிறதோ அதை ப்ராமாணிகர்கள் அறிவர்கள். யாதவப்ரகாசரைப் போல் த்ரமிட பாஷ்யகாரர் விமதரல்லர். அவரை ஸ்வாமி யெம்பெருமானர் அடிக்கடி கொண்டாடுகிருர். [வேதார்த்த ஸங்க்ரஹத்திற்காண்க.] அவ்வர்த்தம் ஸ்வாமிக்கு ருசிக்கவில்லை யென்பது வாஸ்தவம். அதைக் கோண்டே அவ்வர்த்தத்தைப் பூர்வபக்ஷார்த்தமாகக் கொள்ளவேணுமென்று ச்ருதப்ரகாசிகாசார்யப்ரபுருதிகள் எழுதியருளினர்கள் என்று தெரிகிறது.

மர்க்கடப்ருஷ்டத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமை கூறினதாக வல்லாமல் புண்டரீகத்திற்கு உவமை கூறினதாகவும் காண்கிறது. அப்போது நிஹீநோபமை யென்கிற குற்றத்திற்கு ப்ரஸக்தியில்லை. ஸ்ரீ ராமாயணத்தில் அயோத்யாகாண்டத்தில் பிராட்டி பெருமானுக்குச் சந்தனம் பூசினதாகச் சொல்லுமிடத்து அந்த சந்தனத்திற்கு வால்மீகி முனிவர் விசேஷணமிடுகிருர் வராஹருதிராபேண என்று. பெருமாள் திருமேனியில் பிராட்டி பூசுகிற சந்தனக்கிற்குப் பன்றியின் உதிரத்தையா உவமை கூறுவது

என்று கேட்கிறார்கள். இதற்கு நாம சொல்லக்கூடிய ஸமா தான மொன்றுண்டு, அதை அடியேன ஓரிடத்தில் விரி வாக எழுதியிருக்கின்றேன். இங்குச் சுருக்கமாகத் தெரி விக்கினறேன். "மிகுதலுங் குறைதலும தாழ்தலுமுயர்த லும், பான்மாறு படுதலும் பாகுபாடுடைய" எனபது தண் டியலங்கார சூத்திரம. நிஹீனோபமை புன்புலவர் கூறினல் குற்ற மென்று தள்ளப்படுமென்றும, அதுவே நன் புலவர் கூறினல் ஆனமுரால குணமென்று கொள்ளப்படுமென் றும் இச்சூத்திரத்திற்கு உரைவகுத்துள்ளார்கள. வான்மீகி முனிவர் நனபுலவர்களில் தலைவராதலால அவர் கூறின உவமை [வராஹருதிரோபமை] நிஹீனோபமையாகாதெனறு முடிந்தது. மாககட ப்ருஷ்டோபமா விஷயத்திலும இது ஒக்குமனறே என்று கேள்வி பிறக்கும. இதை மஹாப்ரா ஜ்ஞர்கள் விவேசநம பண்ணியெழுத வேணும.

கப்யாஸச்ருதிக்கு மாககட ப்ருஷ்ட மென்கிற அாத தம ஸவாமி யெம்பெருமானார் மிகவுமாதரித்தருளும் தரமிட பாஷ்யத்திலே யுள்ள தெனபதும யாதவப்ரகாசன் ஸவக போல கல்பிதமாகவோ சஙகராசாரயோபஜ்ஞமாகவோ சொன்னதனறெனபதும இந்த வியாஸத்திற்கு உயிராகக கொண்ட விஷய மெனறுணர்க.

---

பதிப்பாசிரியரின் குறிப்பு: ஸ்ரீ ஸ்வாமி கப்யாஸ சருதி விசார மென்றொரு விபுலமான நூல் வடமொழியில் வகுத்துள்ளார்; அதன மிகச் சுருககமான வியாஸமிது. ராசசமபாடி ஸ்வாமி வெளியிட்ட புத்தகத்தில் "தஸ்ய யதா கப்யாஸம புண்டரீகம் ஏவம அக்ஷிணீ" என்று (பக்கம் 15-ல) சருதிவாகயம் காட்டப்படுகிறது. இங்கு அக்ஷிணி எனபது சொல்வடிவமலல; அக்ஷிணீ என்பது சொல்வடி வம். இது தவிவசநம். இது கூட அறியாமல் சொல்லையே மாறுக எழுதுமவர் இப்பெரிய விசாரத்தில இறங்கினது உசிதமா வென்பதை மதயஸ்தர்கள் விமாசிப்பது. அச்சுப் பிழையென்னில், ததாஸ்து.

# புண்டரீக சப்தார்த்தம்.

(ப்ர. அ. ஸ்வாமி.)

எம்பெருமானைப் புண்டரீகாக்ஷனென்று போற்றுதாரில்லை. தாமரைபோற் கண்ணனென்னும் பொருளை விவக்ஷித்தே புண்டரீகாக்ஷனென்கிறார்கள். [ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் வரும் புண்டரீகாக்ஷ நாமத்திற்கு பட்டருடைய பாஷ்யத்தில் தாமரை யென்கிற பொருளின் ப்ரஸ்தாவமேயின்றிக்கே வேறுபொருள் அருளிச் செய்யப்பட்டிருப்பதற்குக் காரணம் வேறு. அது நிற்க.] உபநிஷத்தில் *தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ* என்று எம்பெருமானது திருக்கண்களுக்குப் புண்டரீகமே உவமையாக ஓதப்பட்டுள்ளது. புண்டரீக சப்தார்த்தம் செந்தாமரையா? வெண்தாமரையா? என்று விசாரம். செந்தாமரைக் கண்ணனென்று பல்லாயிரமிடங்களில் போற்றப் படுகின்ற எம்பெருமான் வெண்தாமரைக் கண்ணனாக இருக்கத் தகுதி யில்லையாகையால் புண்டரீகமென்பது செந்தாமரைக்குத் தான் பெயர் என்னவேணும். ஆழ்வார்கள் புண்டரீகபதத்திற்குச் செந்தாமரையைத்தான் பொருளாகக் கொண்டிருக்கின்றார்களென்பதை நிரூபிக்க இடமுள்ளது.

எங்ஙனே யென்னில்; குலசேகராழ்வார் பெருமாள் திருமொழியில் (8-2.) * புண்டரிகமலரதன்மேற் புவனியெல்லாம் படைத்தவனே!* என்கிறார். புவனியெல்லாம் படைப்பதற்கு இடமாயிருந்த புண்டரீகம் செந்தாமரையா வெண்தாமரையா வென்று ஆராயுமளவில், நம்மாழ்வார் திருவாய்மொழியில் *கொப்பூழ்ச் செந்தாமரைமேல் திசைமுகன் கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட கருமங்களும்*

(5-10-8.) என்கிறபாசுரத்தில் செந்தாமரை யென்று ஐய மறச் சொல்லியிருக்கையாலே பேசிற்றே பேசுமேக கண்டரான ஆழ்வார்களின் திருவுள்ளத்தால் புண்டரீகமென்பது செந்தாமரையே யென்று அறுதியிடத்தட்டில்லை.

ஆனல் பரமப்ராமாணிகனை அமரஸிம்ஹன் தனது கோசத்திலே *புண்டரீகம் ஸிதாம்போஜம்* என்று வெண்தாமரையாகச் சொல்லி யிருக்கிறனே, அதற்கென்னகதி? என்று கேள்வி வரும். அமரகோசத்தில் ப்ரமப்ரமாதங்கள் பல காண்கையாலே அவற்றுள் இதுவும் ஒன்றாயிருக்கட்டுமே யென்று சிலர் சொல்லத் துணிகின்றார்கள். நம் பூர்வாசார்யர் களின் திருவுள்ள மென்ன வென்று பார்ப்போம். ஸ்ரீராமாயணத்தில் ஆரண்யகாண்டத்தில், மூக்குங் காது மறுப்புண்டு கதறியோடாநின்ற சூர்ப்பணகை *தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ, புண்டரீகவிசாலாக்ஷௌ * என்கிறாளன்றே. இங்குத் தனிச் லோக வியாக்கியான மருளிச் செய்யாநின்ற பெரியவாச்சான்பிள்ளை—"[புண்டரீக விசாலாக்ஷௌ] * புண்டரீகம் ஸிதாம்போஜமிறே ; * ஸம்ரக்தநயநா கோரா: * என்னு முங்களைப் போலே எரிவிழியாயிருக்கையன்றிக்கே ஸுப்ரஸந்நதவளமான அக்கண்கள் இருந்தபடி என்" என்று புண்டரீகபதார்த்தம் வெண்தாமரை யென்றே திருவுள்ளம் பற்றி யருளிச் செய்துள்ளார். ஸ்ரீராமாயணவ்யாக்யாதாக்களில் தலைவரான கோவிந்தராஜார்யரும் இதை இப்படியே ஸம்ஸ்க்ருதமாக்கி யுரைத்துள்ளார். ஆகவே அமரகோசத்தைப் பழிக்க வேண்டிய அவச்யமில்லை.

புண்டரீகாக்ஷன் என்பதற்குச் செந்தாமரைக் கண்ணனென்றே பொருள்கொள்ள வேண்டுமானலுங்கூட அமரகோசத்தைப் பழிக்கவேண்டா. ஏனென்னில் ; புண்டரீக சப்தார்த்தம் அமரகோசத்தின்படி வெண்தா

மரைதான். ஆனாலும் வெண்மையென்கிற விசேஷணம் சத்தை விட்டுநீக்கித் தாமரை ஜாதியென்னுமளவே கொள்ளக் குறையில்லை. பாற்கடலை க்ஷீரஸமுத்ரம் என்று சொல்வது போலவே 'க்ஷீராப்தி, க்ஷீராம்போநிதி' என்றும் சொல்லா நின்றார்கள். இங்கு க்ஷீரதி, க்ஷீரநிதி என்னுமளவே விவக்ஷிதமாய் அப்தி என்பதிலுள்ள அப்பதமும், அம்போநிதி யென்பதிலுள்ள 'அம்பஸ்' என்னும் பதமும் பொருளில்விடப்படுவதை இவ்விடத்திற்கு ஒருபுடை நிதர்சநமாகக் காண்க.

மற்றொன்றுங் காண்மின்; கலபம் என்கிற வடசொல்லானது வயோநியதியுள்ள யானைக்குட்டியைச் சொல்லாநிற்கச் செய்தேயும விசேஷணம்சமான வயஸ்ஸில் நோக்கின்றிக்கே யானைஜாதியில் மாத்திரம் விவக்ஷையாலே கஜஸாமாந்ய பர்யாயமாகக் கலப பதப்ரயோகம் பண்ணுகின்றார்கள். இதையும் நிதர்சனமாகக் கொள்ளலாம்.

வஸ்துதஸ்து, எம்பெருமானைச் செந்தாமரைக் கண்ணனென்பதும் வெண்டாமரைக்கண்ணனென்பதும் பரஸ்பரம் வ்யாஹதமல்ல. *கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள்* என்ற திருப்பாணாழ்வார் பாசுரத்தில் செவ்வரிபடர்ந்திருப்பதாக ஸாதித்திருப்பதையிட்டுச் செந்தாமரைக் கண்ணனென்கிறது. 'புண்டரீக விசாலாக்ஷஸ' என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை விவரித்தருளினபடி ஸுப்ரஸந்நதையையிட்டு வெண்டாமரைக் கண்ணனென்கிறது.— என்று எளிதாக நிர்வஹிக்கக் குறையில்லை. இதுவே பூர்வாசார்யாபிமத நிர்வாஹம்.

*புண்டரீகம் ஸிதாம்போஜம்* என்று அமரஸிம்ஹன் கோசமிட்டது அஸம்பத்தமாகில் அதை நம் பூர்வாசார்யர்கள் ஆதரித்திருக்க மாட்டார்களன்றே. எம்பெருமான் வெளுத்த கண்களையுடையவனென்று நம் பூருவாசாரியர்கள் திருவுள்ளம் பற்ற ப்ரஸக்தியில்லை. ஸஹஸ்ரநாமத்தில் 'லோஹிதாக்ஷ: ப்ரதர்தந:' என்னுமிடத்தில்

எம்பெருமானுக்கு லோஹிதாக்ஷ னென்னுந்திருநாம மிருப்பதையும் அங்கு பட்டருளிச் செய்த பாஷ்யத்தை யும் காணாதவர்களல்லரோ ; *செந்தாமரைத் தடங்கண்* என்று ஆழ்வார்கள் வாய் வெருவுவதும் வாசாமகோசரம். இவையெல்லாம் நன்கறிந்த பெரியவாச்சான்பிள்ளை *புண்டரீகம் ஸிதாம்போஜ மென்ற அமரகோசத்தை யாதரித்துப் பொருள் பணித்தருளின ரென்றால் அவ்வர்த்தத்தை இல்லைசெய்ய நாமோ அதிகாரிகள்!

*கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ * என்ற ச்ருதி வாக்யத்தின் பொருளையுட் கொண்டு வேதார்த்தஸங்க்ரஹத்தில் ஸ்வாமியருளிச் செய்திருக்கும் கம்பீர திவ்ய ஸூக்தியில் " புண்டரீகதளாமலாயதேக்ஷண: " என்றிருக்கிறது. இங்கு புண்டரீக பதத்தின்மேல், தளம் என்றொரு பதம் கூட்டிப் பிரயோகிக்கப்பட்டிருப்பதால் எம்பெருமானுடைய திருக்கண்களுக்குத் தாமரை மலரோடு ஸாம்யம் சொல்லுகிறதன்று இங்கு; தாமரையின் அவயவமான இதழோடு ஸாம்யம் சொல்லுகிறதாகவே ஸ்வாமிக்கு விவக்ஷை; இந்த உவமை ஆயதத்வாம்சத்தில்—என்று *ராம: கமலபத்ராக்ஷ:* இத்யாதி அனேக ப்ரமாணோதாஹரணத்துடன் ச்ருதப்ரகாசிகாசார்யர் நிரூபணம் செய்தருளியிருக்கிறார். இந்நிலையில் புண்டரீக சப்தார்த்தம் எதுவானாலும் கவலையில்லை. நிறத்திற்கு ஒப்புச் சொல்லுகிறதன்றே, நீட்சிக்குத்தானே. அதற்கு வெண்டாமரையானாலென்ன ? செந்தாமரையானாலென்ன ?

உபநிஷத் பாஷ்யகாரரான ரங்கராமாநுஜஸ்வாமி— "யத்யபி அமரகோசே புண்டரீகம் ஸிதாம்போஜமித்யுக்தம், ததாபி ஸாமாந்யாபிதான பரதயா......" என்று தொடங்கி " ரக்தாம்போஜமேவ புண்டரீகமிதி த்ரஷ்டவ்யம் " என்று முடித்திருக்கிறார்.

---

பதிப்பாசிரியரின் குறிப்பு;—முத்தம் சண்ணம் மொட்டுச் சொட்டு ரஸாஸ்வாத நிரதரான ஈச்சம்பாடி ஸ்வாமி, ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயஸ்தரான பெரிய பரகால ஸ்வாமி பணித்த வியாக்கியானத்திலும் தமது கொள்கைக்கு விபரீதமான அர்த்தமே யெழுதியிருப்பது கண்டு அவரையும் தூஷிக்கவெழுந்து (பக்கம் 17ல்) வடகலை ஸம்ப்ரதாய ஸித்தாந்த ப்ரவர்த்தகரான ஸ்ரீமதபிநவரங்கநாத பரகால மஹாதேசிகன் தென்கலைஞராகிய ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசாரியரோடு சேர்ந்து வடகலை ஸித்தாந்தத்திற்கு விரோதமாக திருப்பல்லாண்டை வேறு பிரபந்தமாகவும் பெரியாழ்வார் திருமொழியை வேறு பிரபந்தமாகவும் பதிப்பித்துவிட்டதாகவும் அந்த பரகாலமஹாதேசிகன் அண்ணங்கராசாரியருடைய கைவாய் வலையுள் அகப்பட்டுவிட்டதாகவும் எழுதியுள்ளார். ஸ்வஸம்ப்ரதாயமே அறியாதவிவர் இதர ஸம்ப்ரதாயத்தைப் பற்றிப் பேசச் சிறிதும் அர்ஹதையற்றவரென்பதை இதன்மேலிரண்டு மஹநீயர்களின் வியாஸங்கள் புலப்படுத்தும். ஜகத்விக்யாதர்களான மஹான்கள் யாவரும் ஸ்ரீ காஞ்சீஸ்வாமியின் கைவாய் வலையுள் அகப்படுவதற்டு இவர் பொறாமைப்பட்டொழிவதன்றி வேறுண்டோ ?

---

## திருப்பல்லாண்டும்-பெரியாழ்வார் திருமொழியும்

பெரியாழ்வாரென்னும் பெயர்பெற்ற வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் திருப்பல்லாண்டும் திருமொழியும் அருளிச் செய்தார். இவை தனித்தனியே இரண்டு பிரபந்தங்கள். திருப்பல்லாண்டு பன்னிரண்டு பாட்டுக்கள் தனியே ஒரு பிரபந்தம். *வண்ணமாடங்கள் சூழ் என்று தொடங்கி

யுள்ள திருமொழி தனியே மற்றொரு பிரபந்தம். உபய ஸம்ப்ரதாயஸ்தர்களின் கொள்கையும் இதுவே. இதில், வரவரமுநி ஸம்ப்ரதாயஸ்தர்களுடைய மதம் வேறு, தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களுடைய மதம் வேறு என்று சிலர் நினைப்பது பொருத்தமுடையதன்று. எம்பெருமானாருடைய நியமனத்தினால் கருட வாஹந பண்டிதர் பணித்த திவ்யஸூரிசரிதத்தில் ஐந்தாவது ஸர்க்கத்தின் முடிவு ச்லோகத்தில் * ஏவம் வல்லபதேவபாண்ட்யந்ருபதேர் கோஷ்ட்யாம்......க்ருத்வா விச்வஹிதம் ப்ரபந்தயுகளம் ஸ்ரீபட்டநாதஸ் ஸுதீ * : என்று, பெரியாழ்வார் இரண்டு பிரபந்தங்களிட்டருளினதாக ஸ்பஷ்டமாய்க் கூறியிருப்பதை உபய ஸம்ப்ரதாயஸ்தர்களும் துல்யமாகவே ஆதரிப்பவர்கள்.

வேதாந்த தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் திருப்பல்லாண்டிலிருந்தும் பாசுரங்களை மேற்கோள் காட்டியுள்ளார்; பெரியாழ்வார் திருமொழியிலிருந்தும் மேற்கோள் காட்டியுள்ளார். ப்ரமாணங்களுக்கு ஆகரம் எழுதி அச்சிட்டிருக்கின்ற தேசிக ஸம்ப்ரதாய துரந்தரர்கள் திருப்பல்லாண்டு பாசுரங்களுக்கு ஆகரம் குறிக்கும்போது "திருப்பல்லாண்டு—இத்தனையாவது பாசுரம்" என்றும், பெரியாழ்வார் திருமொழிப் பாசுரங்களுக்கு ஆகரம் குறிக்கும்போது, பெரியாழ்வார் திருமொழி—இன்னபத்து, இன்ன பதிகம், இன்னசெய்யுள் என்றும் வேற்றுமை காட்டியே ஆகர நிர்தேசம் செய்திருப்பது அபலபிக்கமுடியாததாகையாலே, திருப்பல்லாண்டும் திருமொழியும் ஒரே பிரபந்தமென்றும் தனித்தனி பிரபந்தங்களல்லவென்றும் முன்னோர்களான தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள் கொள்ளவில்லையென்று ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

தேசிகப் பிரபந்தங்களுள் ஒன்றான பிரபந்த சாரத்தில் *பேரணிந்த வில்லிபுத்தூரானிதன்னில்* என்னும் ஒன்பதாம் பாட்டில் * ஏரணிபல்லாண்டு முதற் பாட்டுநானூற்றெழுபத்தொன்றிரண்டு மெனக்குதவு நீயே* என்றிருப்பதைக் கொண்டு நவீனர்கள் சிலர் ' இது செய்யுளுக்குச் சேரப் பணித்தபடி ' என்று கொள்ளாமல் திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியிலேயே அந்தர்ப்பூதமாக ஸ்வாமி தேசிகன் திருவுள்ளமென்று கொண்டு ஏகப்ரபந்தமே யென்னத் தலைப்பட்டார்கள். இது தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள் யாவரும் ஒருமிடருக இசைந்ததன்று. இரண்டையும் ஏக ப்ரபந்தமாகக் கொள்வதில் மஹத்தான சங்கடமுமுண்டு ; அது வென்னென்னில்; திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களைக் காலக்ஷேபம் செய்பவர்கள் திருப்பல்லாண்டு வியாக்கியானம் ஸேவித்து பிறகு இஷ்டமான திவ்யப்ரபந்தங்களின் வியாக்கியானங்களை ஸேவிக்கிருர்கள். திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமல்லாமல், பெரியாழ்வார் திருமொழியின் ஏகதேசமாகில் ஒரு பிரபந்தத்தை அரைகுறையாக ஸேவித்த பாதகம் நேரும். இப் பாதகத்திற்குத் தப்பிப் பிழைப்பார் ஒருவருமே யில்லையென்றும் சொல்லவேண்டியதாகும்.

ஆகவே, திருப்பல்லாண்டு தனிப்பிரபந்த மன்றென்று கொள்ளுதல் ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயத்திலும் விவேகிகளான பெரியார்களுக்கு உடன்பாடன்று. திருப்பல்லாண்டு தொடக்கமென்று எங்கும் வ்யவஹாரமே யொழிய பெரியாழ்வார்திருமொழி தொடக்கமென்று ஓரிடத்திலும் வழங்குவாரில்லை. இப்படிபலகாரணங்களினல் திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமென்றே தேசிக ஸம்ப்ரதாய தத்வவித்துக்களின் கொள்கை. இந்தக் கொள்கைக்கிணங்கவே பெரிய பரகால ஸ்வாமியின வியாக்கியானமும் அவதரித்திருப்பது ஸர்வதாநிரவத்யமே.

திருவயிந்திரபுரம். S. தேவநாதய்யங்கார்,
(வ்ருத்தாசலம்)

# ஸ்ரீ. உ. வே. காளி. ரங்காசாரியர் ஸ்வாமி எழுதுகிறார் ;—

கோழுக்தூர். 27—9—50.

திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் தனித்தனி ப்ரபந்தங்களா ஏகப்ரபந்தமா என்கிற விசாரம் நவீனமாகக் காதில் விழுகிறது திருப்பல்லாண்டு அவதரித்த காலமே வேறு, பெரியாழ்வார் திருமொழி அவதரித்தகாலமே வேறு. இவ்விரண்டு திவ்ய ப்ரபந்தங்களுக்கும் விஷயபேத மிருப்பதுபோலவே காலபேத மிருப்பதும் ஸர்வஜந ஸம்ப்ரதிபந்நமான விஷயம். பாண்டிய ராஜஸபையில் பரதத்வ நிர்ணயம்பண்ணி விரைந்து கிழியறுத்தபோது பெரிய திருவடியின்மீது ஸேவைஸாதித்த பரமபதநாதன் விஷயமாக மங்களாசாஸனப் பொருளதாய் ஸாதித்தது திருப்பல்லாண்டு திவ்யப்ரபந்தம். பிறகு ஸ்ரீ வில்லிபுத்தூர் சேர்ந்தபின், கிழியறுத்துப்பெற்ற பொருளைக்கொண்டு கோபுரநிர்மாணாதி கைங்கரியங்கள் தலைக்கட்டினபின் ஸ்ரீ க்ருஷ்ணாவதார திவ்ய சேஷ்டிதாத்யநுபவ பரீவாஹரூபமாக ஸாதித்தது * வண்ணமாடங்களித்யாதி திவ்ய ப்ரபந்தம். இப்படி காலமும் வேறுபட்டு விஷயமும் வேறுபட்டதாயிருக்க, இவ்விரண்டு ப்ரபந்தங்களையும் ஏகப்ரபந்தமாகக்கொள்வதற்கு ஒருவிதமான ஔசித்யமுமில்லை.

ஸ்ரீ தேசிகனருளிச்செய்த குருபரம்பராஸாரமென்கிற க்ரந்தத்தை, அவரருளிச்செய்த மற்றொரு க்ரந்தமாகிய ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தோடு சேர்த்தே நியமேந அச்சிட்டிருப்பதைக் கொண்டு, ஸம்ப்ரதாயமறியாத சிலர் இவ்விரண்டு க்ரந்தங்களையும் ஏகக்ரந்தமாகவே ப்ரமித்துச் சொல்லுவதும் எழுதுவதும்போலவே திருப்பல்லாண்டு விஷயத்திலும் சிலர் பிரமித்தால் அவர்களை உசிதவேதிகளாக நினைக்க இடமில்லையே. இவ்விஷயத்தில் ஸம்ப்ரதாய பேதமிருப்பதாக நினைக்கவுமிடமில்லை.

புதுக்கோட்டை ஸம்ஸ்த்தானம், ரிடையர்ட் தாஸிகாரி,

காளி. ரங்காசாரியர்.

## ஸ்ரீவில்லிபுத்தூர் உபயவேதாந்த வித்வான்களான ஸ்ரீமத். ரெ. வடபத்ரசாயி அரையர் ஸ்வாமி, ஸ்ரீமத் விஞ்சிமூர் ஆழ்வார் ஸ்வாமி இவர்களின் ஸ்ரீமுகம்.

ஸ்ரீவில்லிபுத்தூர் 27-9-50.

சிலமாதங்களுக்குமுன்பு (அதாவது சென்ற பங்குனிமாதத்தில்) காஞ்சீபுரத்திலிருந்து வயது சென்ற ஸ்வாமியொருவர் ஈச்சம்பாடி திருவம்சத்தவர் என்று சொல்லிக்கொண்டு இவ்விடம் எழுந்தருளியிருந்தார். அவர், இவ்வூரில் காலக்ஷேபபரர்கள் யார்? வித்வான்கள் யார்? என்று கேட்டுக்கொண்டு பல திருமாளிகைகளில் ஏறியிறங்கினர். இவரார்? எதற்காக இங்கு வந்திருக்கிறார்? என்ன விசேஷமாகப் பல திருமாளிகைகளில் ஏறியிறங்குகிறார்? என்கிற விசாரம் அங்கு உண்டாயிற்று. "பெரியாழ்வார் திருமொழியில் மூத்தம் சண்ணம் மொட்டு என்கிற மூன்று சொற்களைப் பற்றி அபூர்வமான அர்த்தம் கண்டுபிடித்திருக்கிறாராம், அதைச் சொல்ல வந்திருக்கிறாராம், சொல்லிக் கொண்டிருக்கிறாராம்" என்றார்கள். சற்றுப்போதில் அடியோங்களையும் சந்தித்தார். மேற்சொன்ன விஷயமாகவே காடுபாய்ந்து பேசுகிறமுறையில் ஏதோ பேசினர். "இவர்க்கு பூர்வாசார்யர்களிடத்தில் பிரதிபத்தியும் கிடையாது, அவர்களின் திவ்ய ஸூக்திகளில் அவகாஹனமும் கிடையாது; ஸத்ஸம்ப்ரதாய ஸித்தரான பெரியார்களிடம் கேட்டவருமல்லர்—என்பதை ஐந்தாறு நிமிஷத்திலேயே யாவரும் தெரிந்து கொண்டார்கள். அடியோங்கள் க்ரஹித்ததும் அதுவே. இந்த வார்த்தைகளை அந்த ஸ்வாமி யிடத்தில் நேரிலும் விஜ்ஞாபித்தோம். "கண்ணனுடைய பும்லிங்கத்தையும் மூத்திரத்



ஸ்ரீமான், உ. வே. வித்வான், ஆண்டாளரையர்,
வடபத்ரமையங்கார்.
(ஸ்ரீவில்லிபுத்தூர்.)

தையுமா ஆழ்வார் பேசுவர்" என்று இதையே அடுத்தடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தார்.

கடைசியாக அவருக்கு அடியோங்கள் சொன்னதாவது—ஆண்டாள் தம்முடைய திருமொழியில் பதிகந்தோறும் நிகமனப்பாசுரங்களில் பெரியாழ்வாரைப் போற்றுகிறாள். ஒரு பதிகத்தில் "போகத்தில் வழுவாத புதுவையர்கோன்" என்கிறாள். கண்ணனை வாசிகமாக அநுபவித்த வ்யாஸ பராசர சுகாதி மஹர்ஷிகளுக்குங்கூட கிடைக்கவில்லாத போகங்களும் பெரியாழ்வார்க்கு உண்டாயினவென்றும் யசோதாதாதாத்ம்ய பாவனையாலே "முத்தமிருந்தவா காணீரே, சிறுச்சண்ணந் துள்ளஞ்சோர, சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத்துளிக்க" என்று சிசுப் பிராயத்து அநுபவங்களுங்கூட ஆழ்வார்க்கு அமைந்ததுபற்றியே இவரைப் போகத்தில் வழுவாதவரென்று விசேஷித்துக் கொண்டாடினளென்று இவ்வூரிலும் எவ்வூரிலும் பெரியோர்கள் பரம்பரையாக ஸாதிப்பது வழக்கம். தேவரீர் சொல்லுகிற அர்த்தத்தை ஒருவரும் செவியேற்கமாட்டார்; ஒரு பெரியவர் சொல்லியும் கேட்டதில்லை. பூர்வாசார்யர்கள் அருளிச்செய்த அர்த்தத்தில் ஒருவகையான அநுபபத்தியும் கிடையாது; தேவரீர் சொல்லுகிற அர்த்தத்தில் ஸ்வல்பமான உபபத்தியுமில்லை. தேவரீர் சொல்லும் அபார்த்தங்கள் இந்த திவ்ய தேசத்தில் விலை செல்லமாட்டா" என்று சொன்னோம். அப்போதுகூட விருந்த பலர் "இந்த திவ்யதேசத்தில் விலை செல்லமாட்டா வென்பதென்? எந்த திவ்யதேசத்திலும் விலை செல்லமாட்டாவென்று கல்வெட்டாகச் சொல்லலாமே; இவர் சிலநாள் முன் ஸ்ரீ பெரும்பூதூருக்கும் வந்திருந்து ஸ்ரீமதித்யாதி வித்வத் ஸார்வ பௌமரான. ஆஸூரி பெரிய ஸ்வாமி ஸன்னிதியிலும் இதே விஷயம் சொன்னார்; அந்த ஸ்வாமி சாய்ந்தபடியே ஸ்ரீமதே ராமா

நுஜாய நம:, என்றும் எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்றும் அநுஸந்தானம் செய்து கொண்டு இவருடைய முகத்தையும் நோக்கவில்லை ; எழுந்து போய் விட்டார் ; மலையேறி மஹார்த்தம் கண்டுபிடித்துவிட்டதாக முத்தமும் சண்ணமும் மொட்டும் சொட்டும் வாய் நிறைந்து எங்கும் இதுவே வாய்வெருவுதலாக இருக்கிறாரிவர்" என்றார்கள். பிறகு அந்த ஸ்வாமி ஒருவர் கண்ணிலும் படாமல் வெளியேறி விட்டார்.

அவர் இப்போது ஏதோ வொருபுத்தகம் சொற்பொருள் விளக்கமென்று வெளியிட்டிருப்பதாகத் தெரிகிறது. எங்களிடம் சொன்ன அஸம்பத்த வார்த்தைகளையே அதில் நிரப்பியிருப்பரென்பதில் ஸந்தேஹமில்லை. ஸம்ப்ரதாய க்ரந்தங்களை ஸதாசார்ய பரம்பரையிற் படிந்து கேளாதவரென்பதைத் தாமே சிலா சாஸனம் செய்து கொள்ள வேண்டியே அவர் புத்தக மெழுதி யிருக்க வேண்டும்.

உபதேச ரத்தினமாலையின் சாற்றுப் பாசுரங்களில் முதற்பாசுர·மொன்றையே அந்த ஸ்வாமி ஸதா அநுஸந்தானம் செய்யப்ராப்தம்.

இப்படிக்கு,

ஆண்டாளஸ்ரயர் ரெ. வடபத்ரமையங்கார்,

விஞ்சிமூர் ஆழ்வார்.

---





ஸ்ரீமான், உ. வே. வித்வான்,
விஞ்சிமூர், ஆழ்வார் ஸ்வாமி.
(ஸ்ரீவில்லிபுத்தூர்.)

# ஆழ்வார் திருநகரி அப்பன்ஜீயர் ஸ்வாமி.

அப்பன் ஜீயரென்று ப்ரஸித்தரான ஸ்வாமி ஆழ்வார் திருநகரியில் முப்பத்தைந்து நாற்பது ஆண்டுகட்கு முன்பு எழுந்தருளியிருந்த மஹாப்ராஜ்ஞரான உத்தமாச்ரமி. இவர் பகவத் விஷய ப்ரவசனம் வெகு அழகாகச் செய்து கொண்டிருந்தவர். பூர்வாசார்யர்களிடத்தில் பக்தியே வடிவெடுத்தவர். இவர் திருவடிகளில் அர்த்தம் கேட்டவர்களில் இரண்டொரு கிழவிகளே இற்றைக்கும் திருநகரியிலுள்ளார்கள். இவர்களும் இவர்களிடத்திற் கேட்டவர்களும் திவ்ய ப்ரபந்தச் சொற்பொருள்களை பூர்வாசார்ய வியாக்கியான முறையில் உள்ளபடி யுரைக்கவல்லார்கள். சில மாதங்களுக்கு முன்பு காஞ்சீபுரத்திலிருந்து ஈச்சம்பாடி ஸ்வாமியொருவர் இவ்விடம் வந்திருந்து ஒருவரோடு முத்தம் சண்ணம் மொட்டு ரஸங்களைப் பருகி வார்த்தையாடி விட்டுச் சென்றது அறிவோம். அவர் அந்த ரஸாஸ்வாதத்தின் பரீவாஹரூபமாக ஒரு சிறுபுத்தகம் அச்சிட்டிருப்பதில் அப்பன் ஜீயர்ஸ்வாமியிடம் தாம் பொருள் கேட்டதாகக் காட்டியிருப்பது உண்மையன்று. பூர்வாசார்ய வ்யாக்கியான விருத்தமான பொருளை அந்த ஜீயர்ஸ்வாமி நெஞ்சாலும் நினைப்பவரல்லர். பெரியாழ்வாருடைய இந்த விலக்ஷணாநுபவம் ஸகல பக்தர்களினுடையவும் நெஞ்சை யுருக்குமதாய், உபய வேதாந்த க்ரந்த நிர்வாஹகர்களும் "ஸத்ஸம்ப்ரதாய பரம்பராப்ராப்த ஸகலார்த்த வர்ஷுக வஸாஹகா:" என்று ப்ரஸித்தர்களுமான மஹநீயர்களால் எங்கும் ஒருமிடருக உபதேசிக்கப் படுமதாயிருக்க, இதை இல்லை செய்யப் பார்ப்பதும், அதற்கு என்றைக்கோ திருநாட்டுக் கெழுந்தருளின — ஒரு பாவமுமறியாத மஹநீயர்களை ஸாக்ஷியிட்டு அவர்க

ளுக்கும் அகௌரவத்தை விளைக்கப் பார்ப்பதும் சிறிதும் யுக்தமன்று.

உலகமெல்லாம் கொண்டாட அவதரித்ததாய் பூர்வாசார்ய வியாக்கியானங்களுக்குக் கைவிளக்காய், ஸதாசார்ய ஸன்னிதிகளில் நெடுங்காலம் துவண்டு அறிய வேண்டிய அரும்பெரும் பொருள்களைத் தேனும்பாலும் நெய்யுங் கன்னலுமமுதுமாகத் திரட்டியிடுமதாய் அமைந்த திவ்யார்த்த தீபிகையுரையிலும் அவ்வுரையாசிரியரிடத்தும் தாம் வெறிதேகொண்ட பகை பொறாமைகளுக்கு வேறு வழிகளில் பரீவாஹம் விடுவது யுக்தமேயன்றி, ஸகல ஸஜ்ஜந ஸம்ப்ரதிபந்நமாய் ஸாத்விகைக போக்யமான ஸமீசீநார்த்தத்தை தூஷிக்கும் முகத்தால் பரீவாஹம் விடுவது சிறிதும் யுக்தமன்று.

இங்ஙனம்

இளையவில்லி சடகோபாசாரியர்,
(கற்குளம் ஸ்வாமி திருமாளிகை)
வடக்குரத வீதி, ஆழ்வார் திருநகரி.

S. R. மாயக்கூத்த ஐயங்கார்,
திருக்குளந்தை யென்கிற பெருங்குளம்.
(Camp. ஆழ்வார் திருநகரி)



ஸ்ரீமான், உ. வே. உபந்யாஸ பூஷணம்,
எம்பார், ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி.
(திருநாங்கூர்.)

## பதிப்பாசிரியர் விண்ணப்பம்

*

நமது ஸ்வாமி யருளிய "முத்தம சண்ணம் மொட்டு மெய்ப் பொருள்" என்னும் வியாஸத்தை ஆங்காங்குள்ள ஸகல ஸ்வாமிகளும் ஸேவித்து ஆனந்தபரிதர்களாகின் றனரென்பதில் ஸந்தேஹமில்லை அடியேனுக்கு மிகவும் பரிசிதர்களாயும் ஆப்தர்களாயுமுள்ள சில மஹான் களுக்கு அடியேன் விசேஷித்து விண்ணப்பம் விடுத் திருந்தேன் அவர்களுடைய பதில் ஸ்ரீமுகங்கள் கிடைத்து வருகின்றன இன்றளவும் கிடைத்த சில ஸ்ரீ முகங்களை இதில் பிரசுரஞ் செய்கிறேன் மற்றவைபின்.

## ஸ்ரீமான் உ.வே. திருநகரி எம்பார் ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமியின் ஸ்ரீமுகம்

திருநாங்கூர்,
12—10—50

ஸ்ரீ ராமாநுஜ பத்திரிகையின் 25-ஆம் இதழைப் பெற்று வாசித்துப் பரமானந்த மடைந்தேன் ஸ்ரீ உ.வே. ஈச்சம்பாடி ஸ்ரீநிவாஸ ராகவாசாரியர் ஸ்வாமி யென்பவ ருடைய பரவ்ருத்தியினால் உலகுக்கெல்லாம் மஹோப காரம் விளைந்தது ஷை ஸ்வாமியை அடியேன் அடிக் கடி காண நேருவதுண்டு, ஆழ்வார் திருநக்ஷத்திர மஹோத்ஸவத்திற்குத் திருவாலி திருநகரிக்கே இவர் வந்திருந்தார் அப்போது ஒருநாள் மாலை 4-மணி தொடங்கி ஸந்நிதி முன் மண்டபத்தில் ஸ்ரீ உ.வே. அண்ணங்கராசாரியார் ஸ்வாமியின் திவ்யாத்புத மஹோபந்யாஸ அம்ருத வர்ஷத்தை ஸகல ஸ்ரீ வைஷ் ணவ பக்த பாகவதர்களும் ஆனந்தமாக அனுபவித்துக் கொண்டிருக்க இவரொருவர் மாத்திரமே இழந்திருந் தவர். இதற்கென்ன காரணமென்று அப்போதே விசா ரிக்கையில் சில விஷயங்கள் செவிப்பட்டதுண்டு திரு மலையுத்ஸவத்திற்கும் இந்த ஈச்சம்பாடி ஸ்வாமி அனேக

மாய் வருவதுண்டு; அப்போதும் ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமியின் உபந்யாஸங்கள் அநேகநடக்கும்; அதைப்பல்லாயிரவர்கள் அநுபவிக்கையில் இவரொருவரே இழந்து நிற்பவர். அத்தோடு நில்லாமல "**அசக்தாஸ் தத்பதம் கந்தும் ததோ நிந்தாம் ப்ரகுர்வதே**" என்கிற ரீதியில் தம்முடைய வாக்கை விசேஷமாக ஸபலமாக்கிக் கொள்வது முண்டிவர். நேற்றுப் புரட்டாசித் திருவோண மஹோத்ஸவத்திலும் திருமலைக்கு எழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமி ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி சின்ன ஜீயர் ஸ்வாமி மடத்தில் சில சிறு அத்யாபகர்களை ஏகாந்தமாக வைத்துக்கொண்டு முத்தம் சுண்ணம் மொட்டு ரஸங்களைப் பருகிக் களிக்கையில் தலைப்பில் ஒரு சிறு புத்தகத்தைத் திறப்பதும் மறைப்பதுமா யிருந்தார். "நஞ்சுடைமை தானறிந்து" என்ற ரீதியிலும் வர்த்தித்தார். அந்தப் புத்தகம் இன்னதென்பதை இப்போதே ஸ்ரீ ராமாநுஜன் பத்திரிகையினால் அறியப் பெற்றேன். ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமியிடத்திலும் அவருடைய திவ்ய ஸூக்திகளிலும் வீணாக மாச்சரியங் கொண்ட இந்த ஈச்சம்பாடி ஸ்வாமிக்கு திவ்ய ஸூக்திகளில் உண்மைப் பொருள் புலப்படாதது வியப்பன்றே. திருநாங்கூரில் ஸகல சாஸ்த்ர வித்வானாயும் உபய வேதாந்த ப்ரவர்த்தகராயும் எழுந்தருளியிருந்து உத்தமாச்ரமியுமான ஸ்ரீமத் பிரதிவாதி பயங்கரம் (தோடா) கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ஸன்னிதியிலும், வண்புருடோத்தமம் பெரிய ஸ்வாமி ஸன்னிதியிலும் அடியேன் பகவத்விஷய காலக்ஷேபம் செய்துகொண் டிருந்த காலத்திலேயே ஸ்ரீ காஞ்சி ஸ்வாமியின் திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை ஸஞ்சிகை மாதந்தோறும் அந்த ஸ்வாமிகளுக்குக் கிடைக்கும். அந்த உரையின் சொல்லின்பங்களையும் பொருளின்பங்களையும் அந்த ஸ்வாமிகள் ஆச்சரியமாகப் புகழ்ந்து கோஷ்டியிலேயே அருளிச் செய்வது வழக்கம். பூர்வாசாரியர்களின் திருவுள்ளக் கருத்தை உள்ளபடியுணர்ந்து பதவுரையும் விசேஷவுரையும் ஸ்வாபதேச

வுரையும அமைநதிருககு மழைைக கொணடாடாதவா ஒரு குகராமததிலாவது கிடைடபபோ? ஸவாமியின திவயாாதத தீபிகையுரை அனறு தொடடு இனறு வரை யில மூனறு நானகு பதிபபு ஆகியிருககிறது பெரிய விதவானகளுமே இவவுரையி னுதவிகொண்டே விசத மாக உணர்நது தெளிவு பெறுகிறாாகள

இது திவவியப பிரபநதஙகளுககு மாததிரமனறே, ஸவாமியின உரையில்லாத ஸமபரதாய கிரநதம ஒன றுணடோ? உபய பாஷைகளிலும ஆஸதிக ஸ்ரீ வைஷ ணவாகளுககுப போது போக்காக அமைநதுளள ஸகல கிரநதஙகளுககுமே தேனும பாலும கனனலு மமுதுமான உரையனறோ ஸவாமி யிடடருளியிருக்கிறது. இவற றை யெலலாம ஒருவன ஒரு புருஷாயுஸ்ஸில வாசிதது முடிகக முடியாதெனறு பொருமையறற பலபோகள் சொலலக கேடடிருககிறேன இதில என்ன ஸநதே ஹம், ஸவாமிஎழுதுகிற ஒவவொருபுததகமும் வாசிக்கக கையிலெடுததுக கொணடால ஊணும் உறககமும் மறந து கடைசி வரையில வாசிததுவிடடே யனறோ வேறு காரியம் பாாககவேணடிய தாகிறது ஒரு விஷயததை விமாசிகக எடுததுககொணடால் எததனை பரமாணங கள! எததனை யுகதிகள! எததனை யுப்பததிகள! எவவ ளவு ஆசசரியமாக எழுதப படுகினறன வெனபதைப பொருமை யாளாகளின உளளமும உணாநது தீருமே,

மற்றவிஷயஙகள கிடககடடுமே; "மூததம் சணணம் மொடடு மெயப பொருள" எனகிற பரகருத வ்யாஸத தையே கொளவோம். இபபடி ஒரு ஆராயசசி உலகில காண முடியுமோ? ஒரு மயகக முணடா? ஒரு அபசபத முணடா? ஒரு வமபுப் பேசசு உணடா? ஒவவோரக்ஷர மும் "இவரென்ன ஹயக்ரீவாவதாரமோ! யதிவர புநரவதாரபுநரவதாரமோ!" எனறு விதாககிககச செய கிறதே. அநத ஈசசம்பாடி ஸவாமி எவவளவுதான ஆகரஹங கொள்ளடடும், எவவளவுதான அஸூயை

கொள்ளட்டும், விவேகியா யிருந்தால் உள்ளே யுருகி நையமாட்டாரோ? மறுபடியும் வாயைக் கையைத் திறக்க முடியுமோ அவருக்கு? பிரமாணிகரா யிருந்தால் பெரியார்கள் திகழும பெருநதிரளிலே வந்து நின்று பேசட்டுமே. இவர்க்குச் சில சதுர்த்தர்களே யன்றோ ஸம்பாஷண யோக்யர்களாகவும ஸஹவாஸ யோக்யர் களாகவும் ஸதகார யோக்யர்களாகவும் வாய்க்கிறார்கள்.

அவர்களுங்கூட இவர்க்கு ஹிதோபதேசங்களே செய்வதாகத்தான் தெரிகிறது. அந்தோ! எதுவும் இவர்க்குப் பயனபடுவ திலலேயே. நேற்று வெளிவந்த ஸ்ரீராமாநுஜன 25-ல் முடிவில் "இராவணனுக்குக் கிடைத்த உபதேசங்கள்" என்று மகுடமிட்ட ஓர் அற் புதமான வியாஸம் காண்கிறது. அது இந்த ஸ்வாமீக் காகவே வெளியிடப் பட்டிருக்குமோ என்றுகூடத் தோனறுகிறது. உண்மையில அது மிகவும் பொருத்த மானதிவர்க்கு. ராவணனுக்குப் பத்தெட்டு பேர்களே உபதேசம் செய்தவர்கள். இவர்க்கோ அடியேனுக்குத் தெரிந்தே நூற்றுக் கணக்கான மஹான்கள் உபதேசம் செய்திருக்கிறார்கள். "ஏஷ மே ஸஹஜோ தோஷ: ஸ்வபாவோ துரதிக்ரம:" என்று மால்யவானுக்கு முடிவாக ராவணன் சொன்ன விடைதானே சொல்லநேரும், விளக்கில் விட்டிலகள் வேணுமென்று வந்து விழுந்து மடிந்து போகின்றனவே, இது என்ன விதி! என்று பலர் ஆச்சரியப் படுவதுண்டு. அது ஒரு ஆச்சரியமா? இதுவன்றோ நிகரில்லாத ஆச்சரியம்.

ராமாவதாரத்திலும் கிருஷ்ணவதாரத்திலும் அரக்க ரசுரர்கள் மேல்விழுந்துவந்து மடிந்து முடிந்து போவார் களைக் கண்டுவைததும் ஒன்றின்பின ஒன்றாக மேன்மே லும் வந்து விழுந்து நிச்சலும் மடிந்து போனதாக மஹர்ஷிகள் கதை யெழுதி வைத்திருக்கிறார்களே, இப் படி கூட உண்மையாக நடந்திருக்குமா? ஏதோ அதி வாதமாகத்தான் இருக்குமோ? என்று அடியேன் போல் வார் சில சமயங்களில் ஸந்தேஹிப்பதுண்டு; அந்த ஸந்

தற்றெல்லாம் அறவே தொலைந்து போயிற்றிப்போது
இன்புறுமிவ் விளையாட்டுடையானான பெருமானுக்கு
இதுவுமொரு விளையாட்டுப் போலும்! என்றல்லது
வேறொன்றும் நினைக்கலாவதில்லை.

முடிவாக ஒரு சிறு விஷயம் விஜ்ஞாபித்து நிற்கி
றேன். அடியேன் பத்தெட்டு வருஷ காலமாகத் திரு
மூலநாதோறும் சிறுபுலியூர் விடை கொண்டு அங்கே
கிரந்த காலக்ஷேபம் நடத்திவர மஹான்களால் நியமனம்
பெற்று நடத்திவருகிறேன். சென்ற வருஷம் மார்கழி
முப்பதும் திருக்கடிகையில் தக்கான் ஸன்னிதியில்
ஆண்டாள் ஸ்ரீ ஸூக்தி ப்ரவசனமும் நடத்தினேன்.
இப்படி பல ஸந்தர்ப்பங்களில் விலக்ஷணவ்யக்திகள்
பலரோடு கலந்து பழக ப்ராப்தமாகிறது. அப்படிப்
பட்ட ஸமயங்களிலெல்லாம் ஸ்ரீ அண்ணங்கராசார்ய
ஸ்வாமியின் திவ்ய ஸூக்திப் பெருமைகளையும் மற்றும்
அதிமாநுஷ ப்ரபாவங்களையும் பேசுமவர்களே காணப்
படுவார்கள். எவருடைய கையிலும் ஸ்ரீ ஸ்வாமியின்
வியாக்யான க்ரந்தங்களும் உபந்யாஸ க்ரந்தங்களுமே
பெரும்பாலும் காணப்படும். குணபக்ஷபாதிகளின் தன்
மை இங்ஙன் இருக்க, சில அஸூயா பிண்டங்கள்
தேனுகன் பிலம்பன் காளியனென்னும் தீப்பப்பூடுகள்
பட்ட பாடுபடுகின்றன வென்றால் இது இவ்விருள் தரு
மாஞாலத்திற்கு உற்றதேயென்று கொண்டு உகந்திருக்
கவேவேணும். "இகழ்கை ஆச்சரியமோ தானவர்க்கு"
என்ற மணவாள மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியின் அநு
ஸந்தானமே நமக்குத் தஞ்சம்.

அடியேனுடைய திருத்தகப்பனார் நாற்பது ஸம்வத்
ஸரங்களுக்கு முன்பு திருமலை திருப்பதியில் சில காலம்
சின்ன ஜீயர் ஸ்தானத்தை அலங்கரித்தருளி யிருந்தார்.
அப்போதே நம் அண்ணா ஸ்வாமியின் ஞானப் பெருமை
பற்றியும் திருநாவீறு பற்றியும் மிகமிக அதிசயித்து
அருளிச் செய்யும்படி யிருந்தது. அப்பெருமை மேன

மேலும் ஓங்கி வளர்வதுகண்டு உலகமெல்லாம் பல்லாண்டு பாடா நிற்க, "என்றுமென் பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்கள் அங்ஙன மாவர்களே" என்று யசோதை சொன்னபடிக் கிலக்காகிச் சில மஹாபுருஷர்கள் தோன்றினுல் அவர்களும் ஸ்வாமியின் பெருமையைப் பரவச் செய்பவர்களே யென்றுதான் உள்ளபடி கொள்ளவேண்டும். "இவை பின்னும் வயிற்றுள" என்று ஆழ்வார் ஸாதித்தபடி அடியேன் விஜ்ஞாபிக்க வேண்டியவை இன்னமும் அபரிமிதமாகவே வயிற்றினுள்ளே யுள. மீண்டும் ஸமயம வாய்க்கும்போது ஆசைதீர விஜ்ஞாபித்துக்கொள்வேன,

தாஸாநுதாஸன்
**தி. எம்பார் ஸ்ரீநிவாஸாசாரியன்,**
திருநாங்கூர்.

## ஸ்ரீமான் உ.வே. திருநகரி எம்பார் வேங்கடாசார்ய ஸ்வாமியின் திருமுகம்.

திருநகரி,
14—10—50

அஸ்மத் ப்ரிய ஸௌஹ்ருந்மணியான ஸ்ரீ மத் பரவஸ்து வரதாசாரியர் ஸன்னிதியில்.........விண்ணப்பம். அடியானிவனென் றருள்செய்த திருமுகத்தைச் சென்னி மேலணிந்து சிறந்தேன். அந்தத் திருமுகத்தைக் கண்டதும் "மாசூண வான் கோலத்தமரர் கோன்வழிப் பட்டால் மாசூண வுன்பாதமலர்ச் சோதி மழுங்காதே" என்ற பாசுரமே அடியேனுக்கு நினைவுக்கு வந்தது. ஸ்ரீமத் அண்ண ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்திகளைப் பற்றி அபிப்பிராயம் கொடுக்க அடியேன் போல்வாரா அதிகாரிகள்? அடியேன் எல்லாவற்றிலும் சிறியவனு யிருந்தாலும் அடிக்கடி பல பெரியார்களோடு வார்த்தையாடும் பாக்கியம் நேருவதுண்டடியேனுக்கு. "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:" என்று ஏடு



ஸ்ரீமான், உ. வே. வித்வான்,
எம்பார் வேங்கடாசாரியர் ஸ்வாமி.
(திருநகரி.)

களில காணும விஷயம் ப்ரதயக்ஷமாகிறது அணணு ஸவாமியின ஸ்ரீஸூக்திகளே எஙகும யாவாககும ரஸா யனம். அடியேனுககும சில சமயஙகளில அஸூ யை யுணடாவதுணடு, நாமும வாசிககவிலலையா, நாமும் காலக்ஷேபம் பணணவிலலையா, பரவசனம பணணவிலலையா, நாமும ஸவாமியைபபோல கிரநதங களை யெழுதியும் உபநயாஸஙகளைச செயதும உலகத் தை யீடுபடுததிககொளள லாகாதா எனறு நினைபப துணடு, நாம நினைதது எனன பயன? "பெருஙகேழ லார தம பெருஙகண மலாப புணடரீகம் நமமே லொருஙகே பிறழ வைததார" எனறு ஆழவார ஸாதித தபடி அநதத திருக்கணணோகக மனறோ வாயகக வேணடும்.

"இப்படி யிருககும் ஸ்ரீ வைஷணவா களேறற மறிநதுஉகநதிருககையும" எனற விடததில மணவாள மாமுனிகள அருளிச செயதிருப்பது அறியாதாருண டோ? "கீழச சொனனவை யெல்லா முணடானாலும உணடாக வரிதா யிருபப தொனறிறேயிது" என றனறோ அஙகருளிச செயதிருபபது அநத ஸ்ரீ ஸூகதி பொயயாகுமோ? சில மஹாநுபாவாக ளிடததிலாவது அநத ஸ்ரீஸூகதி ஸபலமாக வேணுமே. அநத ஸ்ரீ ஸூகதிககு அடியேன தபபிப் பிழைததுவருகிறேனென றே இறுமாப்புடையேன "இநதளததிலே தாமரை பூததாறபோலே" எனறு அவவிடததில மணவாள மாமுனிகள அருளிச செயதிருக்கிற ஸ்ரீஸூகதி நம அணணு ஸவாமியைத திருவுளளம பறறியே யெனறு சபதபூரவமாக அடியேன பலவிடஙகளிலும நெடுநா ளாகச சொலலிவருமவன அப்படி அடியேன சொல லுவதை அபிநநதிபபவர்களே எஙகுமுளளாரகள. மறுப் புரைபபா ரொருவரையும ஓரிடததிலும கணட திலலை

நேறறு சிததிரை மாதததில் மதுரையில நடநத ஸதஸமபிரதாய ஸபைககு அடியேன விடைகொண

டிருந்தேன். மூன்று நாட்களும் ஸ்வாமியின் உபந்யாஸ வமுதப் பெருக்குகளைப் பருகுவதற்காகவே போயிருந் தேன். ஆரம்பநாளிலேயே கடைசிநாள் அடியேனை யும் ஒரு உபந்யாஸம் செய்யும்படி ஸபையார் நியமித் தார்கள். அடியேனை பிரார்த்தித்துப் பெறவேண்டு வது கட்டளையாகக் கிடைத்ததே யென்று மிகவுமுகந்து நம அண்ணா ஸ்வாமியின் வைபவத்தையே ஒரு மணி காலம் உபந்யஸித்தேன். அங்கு ஆயிரக் கணக்காக கூடியிருந்த ஸ்வாமிகளும் பக்த பாகவதர்களும் ஆழ்வா ரெம்பெருமானார் ஜீயர் வைபவங்களைக் கேட்பதுபோல 'உரோம கூபங்களாய்க் கண்ண நீர்கள் துள்ளஞ்சோர' என்னும் நிலையில் கேட்டிருந்ததைக் கண்ட அடியேன், ஸ்வாமியின் வைபவத்தை அன்றுதான் உள்ளபடி யறிந் தேனாக நினைத்தேன். பூர்வாசாரியர்களால் நாம என்ன வுபகாரங்களை யடைந் திருக்கிறோமோ அவ்வுபகாரங் களை ஸ்வாமியால் பதின்மடங்காக அடைந்து வருகி றோமே என்றே ஒவ்வொருவர் வாக்கிலும வெளிவந் தது. அந்த மஹாசார்யர்களையும் தூஷிக்க அப்போது பிறந்தவர்களே இப்போதும் பிறந்திருக்கிறார்க ளென் றால் இதில் என்ன வியப்புள்ளது?

அடியேன மதுரைக்கு விடைகொண்ட அந்த ஸம யத்திலேயே நன்கறிந்த வொரு விஷயத்தையும் இங்கு விஜ்ஞாபிக்க வேண்டியது அவசிய மாகிறது. இப் போது முத்தம் சண்ணம மொட்டுரஸங்களை அநுபவிப் பதில் ஆஸ்தை கொண்டுள்ள ஈச்சம்பாடி ஸ்வாமி அப் போது சிலநாள் முன்னதாகவே அங்கு வந்திருந்து அவ் விடத்தில் இரண்டொரு நபர்கள் அண்ணா ஸ்வாமி யிடத்தில் பகை பூண்டவர்களென்று தாம் கேள்விப் பட்டிருந்ததைக் கொண்டு அவர்கள் பெயரையும் வீட் டையும் விசாரித்துச் சென்றிருந்தாராம்; அங்கே சில விசித்திரங்கள் நடந்ததாம். அது கிடக்க; அண்ணா ஸ்வாமியின் மீது அவத்யம் சொல்லுகிறவர் எவர்? எங்

குளா? என்று விசாரிப்பதும், அவரையணுகி உறவு கொள்ளப் பார்ப்பதும், அவர்களும் ஸ்வாமி திருவடிகளில் அபசார க்ஷாமணம் செய்து கொண்டவர்களே யென்று தெரியவந்தால் அவர்களையும் நிந்திக்கப் புகுவதும், வேறு எந்த ஜில்லாவிலாவது தமக்குத் துணைவர்கள் கிடைப்பார்களாவென்று இரவும் பகலும் இதுவே தொழிலாகத் திரிவதும் இவையே இந்த ஈசசமபாடி ஸ்வாமிக்கு ஸகல நித்ய நைமித்திக கருத்யமாகிவிட்டதென்பதை அப்போது மதுரையில் கூடின பலவூர் ஸ்வாமிகளும் சொல்லிச் சொல்லி வில்வறச் சிரித்திட்டார்கள். அது பொய்யன்று, ஸத்யமே யென்று மூதலிக்க இப்போது இவர் வெளியிட்ட சிறு புத்தகத்தில் ஒரு பகுதி யுள்ளது அந்த வேடிக்கையைச் சிறிது நோக்கவேணும் ஆந்திர தேசத்தில் நைஜாம இலாககாவில் ரகுநாதாசாரி யென்றொரு சிறுவன் சில காவியங்கள் வாசித்தவன் நம ஸ்வாமியிடம் அபசாரப் பட்டவனுண்டு ஸ்வாமியின் தலைமையில் நைஜாம தலைநகரில் நடந்த வொரு யாகத்தில் அச்சிறுவனுக்கு தக்ஷிணை கிடைக்காத ரோஷத்தினால் ஸ்வாமியை தூஷித்துச் சில காகிதங்கள் வெளியிட்டானவன். அந்த தௌஷ்ட்யத்தைக் கண்டித்து அந்நாட்டினர் பலர் வெளியிட்டவைகளும் உலகம் பரவி யிருக்கின்றன. அதைக் காணாமல், அச் சிறுவன் ஸ்வாமி திருவடிகளில் அபசாரப் பட்டதையே இப்பெரியவர் பெரிய ஆனந்தச் செய்தியாகக் கொண்டு அவனை வித்வானென்று குறிப்பிட்டும் வரரங்கலில் சாஸ்த்ர ப்ரவசனம் செய்கிறானென்று வெகு பெருமையாக எழுதியும் போருகிறார் அவன் மிகப் பெரிய வித்வானாகவே யிருக்கட்டும், இவர் செய்யும் முத்தட்ட சண்ணம் மொட்டு ரஸாநுபவத்தில் அவன் பரஸ்தாவத்திற்கு என்ன ப்ரஸக்தி. ஸ்வாமி திருவடிகளில் அபசாரப்பட்டவர்களுடைய திருவடியே தமக்குத் தஞ்சமென்று கொள்பவரிவர் என்பதை நன்கறியலாம். திருவரங்கத் தமுதனார் "திக்குற்ற கீர்த்தியி

ராமானுசனை—மேவும் நல்லோர் எக்குற்றவாளர் எது பிறப்பு ஏதியல்வாக நினைப்போர் அக்குற்ற மப்பிறப்பு அவ்வியல்வே நம்மையாட் கொள்ளுமே" என்று அநுஸந்தித்தது போல "திகழுற்ற கீர்த்தி நம்மண்ணங்கராரியரைத் திட்டும தியார் எகுற்றவாளரெது பிறப்பு ஏதியல்வாக நின்றோர் அக்குற்ற மப்பிறப்பு அவ்வியல்வே நம்மை யாட்கொள்ளுமே" என்றே இவர் நித்யாநு ஸந்தானம் செய்து வருகிறார். உலகில் இப்படியும் சில அதிகாரிகள் இருக்க வேண்டியதுதானே.

தற்காலம் மைஸூரில் ஸ்ரீபரகால மடாஸ்தானத்தை அலங்கரித் தருள்கின்ற ஸ்வாமி சதுச் சாஸ்த்ரவித் வத்வரேணயராய் ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பந்நிதியாய் விளங்குகிறார். அந்த மஹானைப் பற்றிக் குறைகூற இவர்க்கு என்ன நியாய முள்ளது? அந்த மஹாஸ்வாமி நம் அண்ணாஸ்வாமியின் கைவலையிலும் வாய்வலையிலும் அகப்பட்டுக்கொண்டு ஏதோ தவறு செய்துவிட்டதாக எழுதுகிறாரிவர். அண்ணா ஸ்வாமியின் கை வலையாவது லேகந ஸாமர்த்தியம்; வாய் வலையாவது உபந்யாஸ ஸாமர்த்தியம்; இவற்றில் ஸ்ரீ பரகாலஸ்வாமி மாத்திரமேயோ அகப்பட்டுக் கொண்டது; உலகமெல்லாம் அகப்பட்டிருக்கிறது. அதற்கிவர் பொறாமைப்பட்டுப் பயனுண்டோ? இவரும் தமது கை வாய் வலைகளால் மற்றொரு மடாதிபதியை அகப்படுத்திக் கொள்ளட்டுமே.

விமர்சிக்க எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு அடியோடு ஸம்பந்தமில்லாமல் பலபல மஹான்களைப் பற்றி இவர் நிந்தித்திருந்தாலும், நம் ஸ்வாமி, விஷய மொன்றிலேயே கண் செலுத்தி ப்ராமாணிக விவேகிகள் தலை துலுக்கும்படியாக மெய்ப் பொருள் நூல் அருளிச்செய்திருப்பது இவ்வுலகின் பெரும் பாக்கியமென்று விஜ்ஞாபித்து நிற்கிறேன்.

(ச்லோ)

விஷபாரேண மஹதா காவம் நாயாதி வாஸுகி·
வருசசிகோ பிநதுமாதரேண புசசமூாதவம் வஹத
யஹோா.

இபபடிக்கு, அடியவா்களள தம் மடியான,
**எம்பார் வெஙகடாசாரி**, திருநகரி.

ஸ்ரீவானமாமலை மடம ஆஸதான விதவான
உவே. சடகோபையஙகாா ஸவாமி திருககுமாரா.
தமிழாசிரியா **V S. தோதாத்ரி ஐயங்கார் அருளிய திருமுகம்**

உயரனபரும் உயிா நணபருமான ஸ்ரீ உவே **P. R.** வரதாசாரியர்ககு அடியேன ...... .. . ... விணணபபம் தஙகளைப போனற பெரியாாகளும் மதிககககூடிய நிலையில அடியேன சிறிய அறிவினனும இருநதுளளன என பதை எணணுஙகால மடடிலா மகிழசசி யெயதுவது தவிர வேறு யாதுளது? தஙகள மடல பெறறனன. ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான ஸவாமியின'மெயப்பொருள' வியாஸத்தை நானகுநாள முனபே படிதது ஆனநதக் கடலுள் திளைததனன அவவமுதக கடலுள மிதநதேகும அடியேனுககுத் தேவரீா திருமுகம் "யானகணட வினபம பெறுக இவவையம" எனனும முதுமொழியை மறநதனையோ வெனறு தூணடுவதுபோலுளளது. அடியேனெயதிய பேரினப வெளளததின பரீவாஹரூபமாக அடியேனே ஒனறு எழுத வேணுமெனறிருக கையில் தேவரீருடைய நியமனமுங கிடைததது எமபிரானது ஆணையோவென மதிககறபாலது

உலகம போறறும் பெரியாா — வைணவ வுலகின அடிகள்—இருமொழிக கடறகுறுமுனிவா — ஈரிரணடு மொழிப புலவா — பனனூட் பழகிப பல அனுபவஙகள நிரம்பியவா ஸ்ரீ உவே. பிரதிவாதி பயஙகரம

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி யருளிய வேதஸமமான நூலுக்கு நீசனேன நிறையொன்று மிலேன் மதிப்புரை தருவது பாலிடும் பாண்டத்தைப் பூசை பரிசுத்தஞ் செய்யப் புகுந்த கதையினை நினைவூட்டும்; அது சிறிதும் தகாததே யாகும். ஆயினும் ஆற்றல் உணராரிடையினும், மறுதலை பழித்த காலையும் வாளாவிருத்தல் கடனன்று என்பதனை மனத்திற் கொண்டு சிறிது வரையத் துணிந்தனன். ஆழ்வார் திருமொழிகட்கு வழிப் போக்கர் பலரும் பொருளாராயப் புகுவது பெரிய ஸாஹஸம். அதிலும் அறுபதின்மர்க்கு மேற பட்டவர்களின் வேண்டுகோளுக் கிணங்கித் தாம் அதில் தலையிட்டதாக எழுதிக்கொள்வது நகைத்தற்கிட மானது; வீண் செருக்கின் திறத்தினையே வெளிப்படுத் துவதாகும்.

பொய்யும் நிந்தையும் மலிந்த புத்தகத்தைப் பொருள்படுததி நாமொன்றெழுதுவதா என று திருவுள்ளம் பற்றாமல் மெய்ப்பொருள் தத்துவத்தை மெய்யடியார்கட்கு நன்கு விளக்கி யருளிய மஹாவித்வான் ஸ்வாமியின் கருணைத் திறத்தை யாவரே போற்றுதார்? " இது ஒருவருக்கு மறுப்புரை " என்று சிறிதும் புலப் படாத வகையில நள்ளிருட்கண் பெரு விளக்கேற்றி வைப்பதொப்ப ஸ்வாமி வரைந்தருளியிருக்கு மழகு பிறர்க்கு அனுகரிக்கவு மியலாததே.

என் உரையைக் கூறுமுன் எனது வரலாறு தருவதும் ஈண்டைக்குச் சிறிது ஏற்புடைத்தே யாகும். வான மாமலையில் பிறந்த யான வானமாமலை ஸ்ரீவிலலிபுத்தூர் ஆழ்வார் திருநகரி ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீரங்கம் மதுரை இராமநாதபுரம் இவ்விடங்களில் பெரும்பான்மையாக வாஸம் பெற்றவன. ஆங்காங்கு அடியேனின் தொழிற் கல்வியுடன் ஸ்ரீ உவே. காஞ்சீபுரம் மஹாவித்வான ஸ்வாமியின் உரைப் புத்தகங்களை உயர்ந்த துணையாகக் கொண்டு, பொழுது போக்கை ஆழ்வாரருளிச் செயல்



தமிழாசிரியர், வித்வான்,
V. S. தோதாத்ரி ஐயங்கார்.
(வானமாமலை.)

களிலே கழித்தனன். அவ்வப்பொழுது ஆங்காங்குள்ள பெரியார்களின் காலக்ஷேப கோஷ்டிகளில் ஸ்ரீ ஸ்வாமி யின் திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகை யுரைக்கு நிக ழும் பாராட்டுக்களையும் பெருமை யகற்றி யனுபவித் தவ னடியேன். அத்தீபிகை யுரையினையும் பெரியோர் சொல்லமுதத்தினையு மேற்கொண்டு பலர்கருப் பாடங் களும் சொல்லிவருகின்றனன். இந்நில வுலகில் நிலவும் புகழ்பெற்ற மஹா மஹோபாத்யாய டாக்டர் தாக்ஷி ணாத்ய கலாநிதி சாமிநாதையரவர்கள் இத்திவ்யார்த்த தீபிகை யுரையினைச் சென்னிக் கணியாகச் சேர்த்திப் போற்றி யிருப்பது உலக மறிந்திருக்கவும் அவிழ்ச்சுவை யல்லது தமிழ்ச்சுவை சிறிது மறியாதவரும் ஸம்ப்ரதாய மென்பதனையே கேட்டறியாதவருமாகிய சிலர் உபதேச ரத்தின மாலையின் இரண்டாம் பாட்டின் கருத்திற் கிணங்க ஏதேனும் வரைகின்றாரெனின் அது நின்மல மான ஆகாயத்தின் மீது தன் கையிலுள்ள சேற்றை வாரி யிறைக்கும் மஹா மேதாவியின் செயலொக்கு மதத்னை யன்றோ!

நிற்க பலகாலமாகப் பெரியார்களிடம் கேட்கும் பொழுதெல்லாம் முத்தம் சண்ணம் மொட்டு என்ற பதப்பொருள் விளக்கம் வருந்தோறும் நம் ஸ்வாமி தீபிகை யுரையில் ஸாதித்தவாறேதான் கேட்டிருக்கை. வேறு பொருள்காண வழி சிறிதுமில்லையே. உண் மைப் பொருளை உயர்ந்த உபபத்திகளுடன் நம் ஸ்வாமி உலகுக்கு ஊட்டுமாறு ஒருமஹானுபாவர் செய்தசூழ்ச்சி "என்முனோர் எனக்குச் செய்த வுதவி யென்னே" என்ற விபீடணனது மொழியைத்தான் நினைப்பூட்டுகின்றது.

சென்னைப் பல்கலைக் கழகத்தார் 35 ஆண்டுகட்கு முன்னரே தொடங்கிச் சேகரித்து வந்த லெக்ஸிகன் கோசத்தில் இப்பொருள்களை அண்ணங்கரா சாரியார் ஸ்வாமியே முயன்று ஏற்றிவைத்தாரென்று ஒருவர் எழுதிவைத் திருப்பது நம் ஸ்வாமியின் பெருமையையே குன்றிலிட்ட விளக்காக்குகின்றது. நம் ஸ்வாமியின்

திருவாக்கை இளம் பிராயத்திலேயே பேரறிவாளர் பலரும் ஆதரித்து மதித்தினரென்னு முண்மையே யன்றோ வெளிவருகின்றது. பூர்வாசார்ய வியாக்கியானங்களிலும் நம ஸ்வாமியே தம்மனத்துக்கினிய பொருள்களை ஏற்றி வைத்தாரென்றும் கூறத் தலைப்படலாமே. எது கூறினும் ஸ்வாமிக்குப் புகழ்ச்சியாயே தலைக்கட்டு மென்க.

நுண்ணுணர்வும் ஸம்பிரதாயப் பயிற்சியும் பெரியோர்பால் முறையே பெற்ற கேட்டறிவும் பெற்ற நல்லார் ஒருவருங் கூருததும் ஏலாததுமான பொருளை நிரஸித்து உள்ள பொருளை நிலைநாட்டி நம் ஸ்வாமி உலகுக்குச் செய்துள்ள பேருதவியின் பெற்றியினை எடுத்தியம்ப அடியேனிடம் சொற்களில்லாத குறையையே தெரிவித்து இச்சிறு விண்ணப்பத்தை முடிக்கின்றேன். உண்மை வைணவ வுலகம் குற்றம் களைந்து குணம் பெய்து உரியது கொள்க.

இங்ஙனம்
**V. S. தோதாத்ரி ஐயங்கார்,**
போர்டு உயர்நிலை கலாசாலைத தமிழாசிரியன்.
சங்கரநயினா கோவில், 15—10—50.

•

கோயமுத்தூர் அட்வொகேட் ஸ்ரீ உவே.
**C. R. ராமஸ்வாமி ஐயங்கார் B. A., B. L.,** அவர்கள்
அருளிய **திருமுகம்**

ஸ்ரீராமாநுஜ பத்ரிகையின் வரவை மாதந்தோறும் வெகுஆவலோடு எதிர்பார்த்திருந்து அதுகிடைத்தவுடனே ஓரெழுத்து விடாமல் ஸேவிததுக் களிப்பது அடியேனுடைய வழக்கம். அவ்விதமாகவே இம்மாதத்துப் பத்ரிகையையும் ஆவலோ டெதிர்பார்த்துப் பெற்றுப் படித்துப் பேரின்பமடைந்தேன். நம ஸ்வாமி அண்ணங்கராசாரியர் இப்பத்ரிகையில் அளித்துள்ள முத்தம்......மெய்ப்பொரு ளமுதமாகிற பெருவிருந்தை



7. ஸ்ரீமான், உ. வே. ஸத்ஸம்ப்ரதாய தார்தர்,
C. R. ராமஸ்வாமி ஐயங்கார், B. A. B. L.
(கோயமுத்தூர்.)

யருநதினேன. தெகட்டவில்லை பரம போகயமா யிருநததனால பனமுறையும் படிததேன வெகு ஆனநத மாக அனுபவிததேன. அபபடி யனுபவிககுமபோதே இதறகுக காரணமாக இருநதவரையும ஒருவாறு வாழததினேன.

ஆழவாராசாரியாகளின அருளிச் செயல்களை நல் லாசிரியரிடததுக கேட்டுணராத தாநதோனறிகளான சிலா ஸ்ரீ வைஷ்ணவ நாமதாரிகளாய ஸ்ரீ வைஷ்ணவர் களிடம தவேஷ புததியுடனேயே வளாநது, தம மரபி னா போறறி வநதவைகளின உணமைப பொருளைச் சிறிதேனு முணராமல தாம் கணடதே கோலமெனறு தயஙகாமல பிரசாரம செயயவும பிரசுரம செயயவும முன வநதுவிடுகிறாாகள. அதனால உலகுககு அறபுத மான பலனதான கிடைததுவிடுகிறது சில மாதஙக ளுககு முன "நான கணட நலலது" எனறோ அருமை யான நூல நம ஸவாமியால வெளியாகி அதனால உலக முழுவதும் உகபபெயத நோநதது யாவருககும ஞாபக மிருககும அதேபோல இபபோதும பெரியாழவாா திருமொழியிலுள்ள மூனறு சொறகளின உணமைப பொருளை யுணாததும வியாஜததினால் பலபல அபூாவ விஷயவமுதஙகளை எடுததூட்டி யிருபபது அருமருந தனனதே.

"மெயப பொருள காணப தரிது" எனறதறகு மாறாக நமது பூருவாசாரியாகள மெயபபொருள கணட மாஞானியராககக கொணடாடப் படுகிறாாகள. அவ வாசிரியாகளின திவய ஸூகதிகளை நேரிய முறையில காலக்ஷேபம செயது சீரிய பொருளை யறிவாரும் அறி விப்பாரும் இலரே, அலலது சிலரே. அபபடிபபடட உதாராாகளின எணணிககை நாடோறும குறைநது வரு கிறது அநத நிலையில நம ஸவாமி அவதார புருஷராக வே தோனறிச செயதருளும் ஔதாயம ஒருவருககும மறககறபாலதனறு

உண்மைப் பொருள்களையும் மற்றும் பல அரிய பெரிய தத்துவங்களையும உலகுக்கு உணர்த்தவேணு மென்று நம் ஸ்வாமிக்கு உள்ள ஆர்வமும் ஆதரவும் ஸ்ரீ வைஷ்ணவ வுலகுககே யனறு, எவ்வுலகுக்கும் ஒரு நிதியாகவே கொள்ளத் தகும். பெரியாழ்வாருடைய அநுபவமானது பரமவிலக்ஷணம். "ஆழ்வார்களெல லாரையும் போலல்லர் பெரியாழ்வார" என்று ஸ்ரீவசன பூஷணத்தில அருளிச் செய்திருப்பது மங்களாசாஸன விஷயமொன்றுக்கே யென்று கொள்ளவேண்டா. "போகத்தில வழுவாத புதுவையர் கோன்" என்ற பாசுரத்தை யெடுததுக்காட்டி ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்வாமி களிருவர் உரைததுள்ள விசேஷார்த்தம் நெஞ்சை யுருக் குகினறது. அபபடிப்பட்ட ஆழ்வாருடைய திவ்யா நுபவத்தின் சுவையை யறியாதாராய் உண்டியே உடையே உகந்தோடுவாரில் தலைவரான சிலர் பழிக்கப் புகுந்தால் என்ன குறை? 'வேத நூற்பிராயம் நூறு" என்ற திருமாலைப் பாசுரப் படியே போதைக் கழிக்கு மவர்கள் நல்லாசிரியர்களை நாடி நல் விஷயங்களை உணரப்போகிறது மில்லை; கருணையினால் உணர்த்து மவர்களிடத்தில நன்றி பாராட்டும் பாக்கியம் பெறப் போகிறது மில்லை. உள்ளதுரைக்கும் அடியேன் போல் வாரையும் சேர்த்து இனனமும் பழிக்கவே புகுவர்கள். உலக முகக்கவும் உய்யவும் ஒரு நற்பொருளையாவது எடுத்தளிக்க வல்லவர்களோ அவர்கள். பெரியாழ்வா ருடைய திருக்கோட்டியூர்ப் பதிகத்தின் ஐந்தாவது பாட்டினீறறடிக்கே யிட்டுப் பிறந்தவர்களைப் பற்றி நமக்கென்ன சிந்தனை. விலக்ஷணமான லோகோபகாரத் திற்கென்றே திருவவதாரம் செய்தருளியுள்ள நம் ஸ்வாமி பண்டித பாமர விபாகமில்லாமல் அனைவரு மறியும்படி அறிவமுதை யூட்டும் திருத்தொண்டுடன் நீடூழி வாழ்க; பல்லாண்டு பல்லாண்டு இனிது வாழ்க. ஸ்வாமி செய்தருளும் அரும்பெரும சேவைகளை அகங் குழைந்து அநுபவித்து ஆனந்திக்கும் ஆயிரக்கணக்கான

ஆஸதிகாகளில அடியேனும ஒருவனுக இருககபபெறற தொனறுககே உளளமபூரிதது நிறகிறேன

இபபடிககு,
**ஸி ஆர் ராமஸ்வாமி ஐயங்கார்,**
ஸேவாநிவாஸம், கோயமுததூா, 13—10—50.

**பதிப்பாசிரியரின் குறிப்பு —**

ஷை கோயமுததூா ஸவாமி திருநக்ஷததிரம மிக முதிாநதவரெனபது அன்ஞருடைய திருவுருவபபடத தை ஸேவிபபாாககுப புலஞகும. இநத விருததாப்பியத திலுஙகூட இநத ஸவாமி அலலும பகலும நம ஸம்பிர தாய கரநதஸேவையே போதுபோககாக எழுநதருளி யிருபபது மிகவும் வியககததககது அதிலும, நமது காஞசீ ஸவாமியின திவய ஸ்ரீஸூகதிகளில அபரிமித மான பிரேமை கொணடு அவறறையே அநவரத அநு பவமாககககொணடிருககும பெறறியும இநத ஸவாமிககு அஸாதாரணமானது இபபடிபபடட பெருநதகையா ளாகள எலலா நகரஙகளிலும் ஸகல அகரஹாரஙகளி லும ஆயிரககணககாக விளஙகுகினறுாகள. அவரவா களின ஆர்வமெலலாம வெளிவருதறகு ஒரு நலல ஸம யம வாயததததேயெனறு உகககக வேணடியதாகவே யுளளது ... .. ... *

ஸகிநதராபாத ஸ்ரீலக்ஷ்மீநாராயணன ஸனனிதி ஸாவாதிகாரியான ஸ்ரீமத் உவே. வானமாமலை

**தே ஸ்ரீநிவாஸயயங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமுகம்**
19—10—50.

ஸ்ரீமத ஸ வா மி திருவாயமலாநதருளிய மெயப் பொருள வியாஸததை அடியோஙகள ஸேவிதது அடைநத பரமானநதம வாயகொணடு சொலலவும கை கொணடு எழுதவும போகாது கீதாசாாயன "தத

வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா, உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந:'' என்று தெரிவித்தபடி ப்ரணிபாதாபிவாதந பரிப்ரச்ந ஸேவைகளாலே பலகாலம் துவண்டு பெறவேண்டிய மஹார்த்தங்களையே நம் ஸ்வாமி அமுதப்பெருக்காக வாரியிறைத்துவருகிறார். அப்படிப்பட்ட மஹார்த்தங்களில் மிகச சிறந்தவை இந்த மெய்ப்பொருள் வியாஸத்திற் காணும் ஒவ்வோரர்த்தமும். அந்யத்ர மாஸோபவாஸமிருந்து ஸம்வத்ஸர சுச்ரூஷைகள் பண்ணினாலும் கிடைக்கமாட்டாத இவ்வர்த்த விசேஷங்களை வெறும் கருணையினாலே அல்பவ்யாஜங்களை முனனிட்டு வர்ஷிக்கிற நம் ஸ்வாமியின் கருணையை என்னென்பது!

இதற்கு மூலகாரணமான ஸ்ரீயீச்சம்பாடி ஸ்வாமி சில வருஷங்களுக்கு முன்பு இவ்விடம் வந்திருந்தார். இவ்விடத்தில் போஸ்டு மேஸ்டராயிருக்கும் ஈச்சம்பாடி ரங்காசாரிய ரென்பவர் தமக்கு உறவு என்று சொல்லிக் கொண்டு நம் ஸன்னிதியில் வந்திருந்தார். இங்குள்ளாரனைவரும ஸ்ரீ ஸ்வாமியின் ஸ்ரீஸூக்தி யமுதக்கடலில் ஆழ அமிழ்ந்து ஸ்வாமியையே தெய்வமாகக்கொண்டிருப்பவர்களென்பதையறியாமல் அப்போதே இவர் ஸ்ரீ ஸ்வாமி விஷயமாய் அஸம்பாவிதமான சொற்களைக் கொட்டினார். மேலும் பேசவிடாமல் அவரைத்தடுத்து, 'யதாசக்திநிக்ருஹ்ணீயாத் தேவதாகுருநிந்தகாந்' என்ற முறையில் நின்றவாறே, நம் இந்திரஜாலம் இங்கு விலைச் செல்லாதென்று தெரிந்து தூஷித்த வாயாலேயே பூஷிக்க ஆரம்பித்துவிட்டார். அஸூயாவ்யாதியில் அவர் மிகவும் பீடையடைந்து வருகிறாரென்பதை அப்போதே கண்டோம். அவருடைய அஸூயை தேஹத்தளவிலே நிற்குமோ, ஆத்மாந்தமா யிருக்குமோ அறியோம். எப்படியாயினும் அவர் உலகுக்கு மஹோபகாரகரே.

தாஸன்
**தே. ஸ்ரீநிவாஸன்.**

மதராஸ் முத்தியாலுபேட்டை

## M. S. நடராஜ செட்டியார்.



அடியேன் தமிழுலகுக்குத் தெண்டனிட்டுச் செய்து கொள்ளும் விண்ணப்பம். அடியேன் சைவ சமயத்தில் மிகுந்த அன்புடையவன், எனினும் பிற மதங்களில் வீணான வெறுப்பும் பகையுமற்றவன். வைணவ சமயநூல்களின் பொருள்களையும் கேட்கும் பாக்கியமுடையேன். வைணவ வித்துவான்களின் சொற்பொழிவுகளையும் ஆர்வத்தோடு கேட்டு உவக்கும் பழக்கமுடையேன். காஞ்சீபுரம் மஹா வித்துவான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காசாரிய சுவாமிகள் சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல் ஹாலில் நெடு நாளாக நடத்தியருளும் உபந்யாஸங்களை ஸகல மதஸ்தர்களும் கேட்டு ஆனந்திப்பது நாடறிந்த விஷயம். அப்படிப்பட்ட பாக்கியவான்களுள் அடியேனுமொருவன்.

காஞ்சீபுரம் எண்ணெய்க்காரத்தெருவில் வாழும் சீனிவாச முதலியாரவர்கள், நாலாயிர திவ்வியப்பிரபந்தங்கட்கு உரை செய்தருளிய பூருவாசாரியர்களையும் அவர்களோ

டொக்கப் புகழ்பெற்று விளங்காநின்ற ஸ்ரீமத் காஞ்சீபுரம் சுவாமிகளவர்களேயும் மிதமிஞ்சிப்பழித்து வெளியிட்டிருந்த வொரு ஆய்வுரைநூலைக் காண நேர்ந்தது. அதைப்பற்றிச் சிறிது ஆராய்ச்சி செய்ய எனக்கு ஆசை கிளர்ந்தது. அக் காலையில் ஸ்ரீமத் சுவாமிகள் வெளியிட்டருளிய நான் கண்ட நல்லதென்னும் திவ்விய நூலையும் பெற்றுப்படிக்க நேர்ந்தது. சைவசமயத்தில் தோன்றி உலகம்போற்ற நின்ற பேராசிரியர் களுங்கூட திவ்யப்பிரபந்த வியாக்கியான கர்த்தாக்களான மஹாசாரியர்களின் அரிய பெரிய உரை நூல்களில் ஆழ்ந்த அன்புகொண்டு விளங்கினர் என்னும் தத்துவத்தை அதி லிருந்து அடியேன் அறியப்பெற்றதோடு, அந்த ஸ்ரீவைஷ் ணவ மஹாசாரியர்களும் ஸ்ரீமத் சுவாமிகளும் எழுதியுள்ள உரைகளெல்லாம் ஊழிதொறூழிதொறும் உலகம் போற்ற விளங்கத்தகுந்தவையே என்கிற உண்மையையும் உள்ளபடி உணரப்பெற்றேனாதலின், இவற்றை ஷை காஞ்சீபுரம் சீனி வாச முதலியாரவர்களும் அறியப்பெற்று ஒருவாறு செருக் கடங்கியிருப்பரென்று தேறி அவரோடு நேரில் உரையாடுவோ மென்றெண்ணி, சென்ற தைமாத முடிவில் காஞ்சீபுரம் சென்று அந்த முதலியாரையும் நேரில் சந்தித்து இவ்விஷயங் களேப்பற்றிப்பேச எழுந்தேன். அவரும் ஐந்து நிமிஷம் கேட்டுவிட்டு 'நான் பதில் புத்தகம் எழுதப்போகிறேன், அதில் கண்டுகொள்ளலாம்' என்று சொல்லிக்கொண்டே கடு நடையிட்டுச் சென்றார்.

பெரியார்களேப்பழிப்பதொன்று தவிர வேறொன்று மறி யாத இந்த முதலியார் பின்னேயும் பழிப்புரைகளேயேயன்றோ பன்னிப்பன்னி வரையப்போகிறார்; வரையட்டும். அதனால் இவருடைய அழுக்காறு முதலியவை இன்னமும் உலகுக்கு வெட்டவெளிச்சமாகுமே யல்லது வேறு என்னாகும்? என்று அருகேயிருந்த சில பெரியாரிடம் சொல்லிவிட்டு வந்தேன். இவ்விஷயத்தில் நடுநிலைமை வாய்ந்த சில பெரியார்களின் அபிப்பிராயங்களே வாங்கி உலகுக்கு உதவவேணுமென்கிற ஆசை அடியேனுக்குத் தோன்றியதனால் மதிப்புரை மாலே யென்னுமிந்நூலே வெளியிடுகின்றேன்.

இங்ஙனம் தொண்டன்,

**M. S. நடராஜன்.**

மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பரீக்ஷகர்
**முத்து வேங்கடாசலமையர்**





இப்பெரியாருடைய அகவற்பாவும் அரிய பெரிய வியாஸமும்
இப்புத்தகத்திற்கு அருங்கலமாயமைந்தன. மேலே கண்டு களிப்பது.

ஸ்ரீ

புதுக்கோட்டை ஸமஸ்தான தானாதிகாரி (ரிடையர்ட்)
வித்வன்மண்டல மண்டனம், வித்யாவாரிதி, மதத்ரயநிரூபக.
ஸ்ரீமத் உவே. காளி ரங்காசாரியர் ஸ்வாமிகள் எழுதுகிறார்கள்



தேரழுந்தூர் 17—1—50.

ஸ்ரீமத் வேத மார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபய வேதாந்தப்ரவர்த்தகராய் பகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமராய் வித்வத் சிரோமணியாய் ப்ரதிவாதி பயங்கர குல திலகராய் அந்வர்த்த ப்ரதிவாதி பயங்கர

பிருத பூஷிதராய் ஸகல பூர்வாசார்ய திவ்யக்ரந்த திவ்யார்த்த விசதீகரண ஸமர்த்தராய் விளங்கும் ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசார்யஸ்வாமியின் ஸகல ஸ்ரீஸூக்திகளையும் அம்ருதமாகப் பானம் பண்ணுமவர்களில் அடியேன் ஒருவன். ஸ்ரீ ஸ்வாமி ஸாதித்தருளின ஸகலக்ரந்தங்களுக்குள்ளும் திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை முதலான ஸம்ப்ரதாய க்ரந்தங்களைப் பூர்த்தியாகப் பல தடவை ஸேவித்து மிகவும் ஸந்தோஷமடைந்து கொண்டிருக்கிறேன். எவ்வளவு புத்தி ச்ரமம்! எவ்வளவு திரவ்ய ச்ரமம்! எவ்வளவு தேஹ ச்ரமம்! மற்றும் பலவகை சிரமங்களையும் சிறிதும் பாராட்டாமல் முமுக்ஷுக்களுக்கும் மற்றவர்களுக்கும் வேண்டிய ஸகல கிரந்தங்களையும் பண்டிதர்களும் பாமரர்களும் எளிதாகப் புரிந்துகொண்டு ஸந்தோஷ லாபமடையும்படியாக ஸ்வாமி எழுதி வெளியிட்டிருக்கிற மஹோபகாரத்திற்கு அடியேன் போல்வார் என்ன கைம்மாறு செய்யக்கூடும்? ஒன்றுமே யில்லை. ஆனாலும் ஸ்வாமிக்கு ஒரு திருநாமம் சாத்தி அந்தத் திருநாமத்தைக்கொண்டே எல்லாரும் அழைக்கும்படி செய்ய வேண்டும் என்று ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அடியேன் மனதில் புகுந்து இதையெழுதி உலகுக்குத் தெரிவிக்கும்படி நியமித்தபடியால்

பூர்வாசார்ய ஸமுதாயாவதாரர்

என்கிற விருதை அடியேன் ஸ்ரீஸ்வாமிக்குச் சூட்டுகின்றேன். இனி எல்லாரும் இந்தத் திருநாமமிட்டழைத்தே ஸ்வாமியை தெண்டன் ஸமர்ப்பிக்க வேணுமென்றும் பிரார்த்திக்கிறேன்.

திவ்யப்ரபந்தங்களுக்குப் பூர்வாசார்ய வியாக்கியானங்கள் பலவிடங்களில் புரியாமலிருப்பதையும் ஐதிஹ்யங்கள் விளங்காமலிருப்பதையும் இதிஹாஸங்கள தெரியாமலிருப்பதையும் மிகவும் ஸ்பஷ்டமாக விளக்கியும் அவரவர்களுக்கு உண்டாகக்கூடிய அநேக ஸந்தேஹங்களைப் போக்கியும் ஸ்வாமியின் திவ்யார்த்த தீபிகையுரை அமைந்திருக்குமழகு அஸூயையற்றவர்களால் மிகவும் ஸந்தோஷிக்கத்தக்கது. இப்படியே இன்னும் பூர்வாசார்ய கிரந்தங்களை யெல்லாம்

விசதாரததஙகளாக பரகாசபபடுததிககொண்டு நீடூழி வாழ வேணும ஸவாமியின கிரநதஙகளே பூரவாசாரயாகளுககு மிகவும உகபபு எனபது அடியேனுடைய நமபிககை.

குணஙகள மலை மலை யாக இருநதாலும அதுகளைக காணமாட்டாமல தோஷஙகளையே தேடியும கலபிததும காட்டுகிறவாகள எககாலததிலும எஙகுமுணடு அவாகளைப பொருளபடுததவேணடிய அவசியமேயிலலை ஸவாமியின பலவிதமான கிரந்தஙகளினால மஹோபகாரமடைகிறவாகள தான இவவுலகில அதிகம எனபதை அடியேன நனருக அறிவேன அபபடிப்பட்டவாகளிடையில சில பொருமைககாராகளுமிருபபது ஆசசரியமலல அவாகளுககும பதில சொலலவேண்டியது அவச்யமெனறு சிலா நினைததாலும அடியேனுடைய புததியில அது ஈஷததும அவசயமாகத தோனறவிலலை அதறகுச செலவிடுகிற காலததையும புததிசாம தேஹசாம திரவயசாமாதிகளையும இனனமும அதயாவசயக காநத நிமாணஙகளிலும வயாகயான ரசனைகளிலும செலவிட்டு அஸமாதருசாகளை மேன மேலும ஸநதோஷப்படுததிககொணடு வையமமனனி வீறறிருகக வேணுமெனறு பகவதபாகவத ஸநநிதிகளிலே பிராாததிதது நிறகிறேன.

இநத அடியேனுடைய விஜஞாபனபததிரிகை ஸ்வாமியின ஒவ்வொரு காநததததிலும முகபபில அசசிட்டு பாசுரம செயயபபட வேணடுமெனபது அடியேனுடைய முகயபராாததனை

இவவணணம்,

**காளி. வங்கிபுரம், ரங்காசாரியர்.**

## பெருமாள் கோவில் ஸ்ரீமான் உவே பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காசார்ய ஸ்வாமிகள் அருளிச்செய்த திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையின்

## சிறப்புப்பாயிரம்.

---

1 சீர்பெருகு மண்ணுவாஞ் செந்தமிழ்ச் செல்வரவ
ரோர்பெருகு மாழ்வார்க ளின்கவிகருப்—பேர் பெருகு
மின்னுரை செய்தனரா லிவ்வுரைதன் மேன்மைதனை
யென்னுரைக்க வல்லேனே.

2 செந்தமிழு மாரியமுந் தேர்ந்தநா வீறுண்டயோ
ரந்தணர் கச்சிவா ழண்ணங்கர்—செந்தமிழ்ப்பா
வின்னுரை செய்திட்டா ரென்றக்கா லிவ்வுரைசீ
ரென்றுரைக்க வல்லேனே.

3 திவ்யப் பிரபந்தத் திவ்யார்த்த தீபிகையா
லிவ்வுலகி லாழ்வாரக ளின்கவிக்குச்—செவ்விகொ
ளின்னுரையைப் பாமரரு மின்றறிந்தா லிவ்வுரைசீ
ரென்னுரைக்க வல்லேனே.

4 ஆழ்வார்க ளின்கவிக் காரமுதா நல்லுரையைத்
தாழ்வாது மிற்கச்சி தன்னினனி—வாழ்பிரதி
வாதி பயங்கர மண்ணஙகர் செய்தனரா
லீதின்சீர் சாற்றரிதா மே.

5 ஆழ்வார்க ளின்கவிக் கண்ணங்கர் சையுரையா
லாழ்வார்கட் பாப்பொருளோ டம்புவியின்—வாழ்வார்க
ணன்கறிவர் தென்கலை நற்சம் பிரதாய
மின்றுபெறு மேற்றமது வே.

முஸர்பாக்கம். விரக்தி ஸ்ரீநிவாஸாசாரியர்,
திருப்புட்குழி மல்ஜீ, அத்யாபக
மிராசுதார்.
தமிழ்ப்பண்டிதர்

7—2—50

ஸ்ரீ

# பேராசிரியர் பெருமை விளக்கு.

ஸ்ரீ வைஷ்ணவசமயத்தில் பேராசிரியர்களாய் விளங்கி திவ்யப்ரபந்த வியாக்கியான கர்த்தாக்களாகப் புகழ் பெற்ற பெரியவாச்சான் பிள்ளை முதலான பேரறிவாளர்களின் பெருமையை இழித்துரைத்த புல்லறிவாளர்களின் புல்லுரைகளை மறுத்துரைக்க உலகமெல்லாம் ஊக்கங்கொள்ளவேண்டியது மிக அவசியமாதலால் இத்தொண்டில் யானும் சிறிது சம்பந்தம் பெற விரும்புகின்றேன்.

" திவ்வியப் பிரபந்தமும் —
— திவ்வியார்த்த தீபிகை யுரையும் "

என்னும் பெயர் பூண்ட ஓர் ஆய்வு உரைநூல் காஞ்சீபுரம் வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் என்பவரால் எழுதியச்சிடப் பெற்றுச் சில மாதங்களுக்கு முன்னமே நமது பார்வைக்கு வந்தது. ஆழ்வார்கள் அருளிய நாலாயிரத்திவ்யப்பிரபந்தங்களைப் பண்டு ஏட்டில் எழுதியவர்களாலும் அவற்றிற்கு உரை செய்த பெரியவாச்சான்பிள்ளை முதலிய பேராசிரியர்களாலும், திவ்யபிரபந்த திவ்யார்த்த தீபிகையென்று உலகம் புகழும் விரிவுரை செய்த ஸ்ரீ காஞ்சீ அண்ணங்காராசார்ய சுவாமிகளாலும் அத்திவ்யப் பிரபந்தங்களுள் பிழைப்பாடங்கள் புகுத்தப்பட்டனவாகவும், போலிப்பொருள்கள் பல எழுதப் பட்டனவாகவும் அவற்றை இம்முதலியார் தாம் மறுத்து நேரிய பாடங்களையும், சீரிய பொருள்களையும் காட்டுவதாகவும் மேற்குறித்த புத்தகத்தின் முகப்புத்தாளிலும், உள்ளே பக்கந்தோறும் எழுதியுள்ளார்.

இவர் ஆராய்ச்சி செய்துள்ள விஷயங்களின் தன்மை எத்தகைத்து என்பதைப்பற்றி நாம் தெரிவிப்பதற்கு முன் இவரது நூல்நடை எத்தகைத்து என்பதைப்பற்றி முக்கியமாகத் தெரிவிக்க விரும்புகிறோம். ஆனால் நாம் தெரிவிப்பதற்கு முந்தியே, இப்புத்தகத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்த

சில ஆங்கிலப்பத்திரிகைகளும், பல தமிழ்ப்பத்திரிகைகளும் உண்மையைச் சிறிதும் மறைக்காமல் உள்ளவாறு தெரிவித்திருக்கின்றன. அவை உலகமெங்கும் பரவியிருப்பதனுல் நாம் தனிப்படத் தெரிவிக்க அவசியமில்லையென நினைக்கிறோம்.

திவ்வியப்ரபந்தங்களைப் பற்றியாவது அவற்றின் வியாக்கியானங்களைப் பற்றியாவது ஆராய்ச்சி செய்ய எழுவதற்கு முதலியார் சிறிதும் உரிமைவாய்ந்தவரல்லர் என்பதை உலகமெல்லாம் இசையவும் அவர் தாமும் இணங்கவும் முதலில் சுருக்கமாகத் தெரிவிக்கிறோம்.

வைணவ ஆசிரியர்களுள் வியாக்கியான கர்த்தர்களாக மிக்க பெரும் புகழ் படைத்தவர்கள் இருவர்—பெரியவாச்சான் பிள்ளையும், மணவாளமாமுனிகளும் இவர்களுள் பெரியவாச்சான் பிள்ளை என்பவர் மணவாளமாமுனிகள் திருவவதாரம் செய்வதற்கு முந்தியே திருநாடு சென்றவர். இது உலகமறிந்த உண்மை. அப்பெரியவாச்சான்பிள்ளை ஆழ்வார்களின் திவ்வியப்ரபந்தங்களுக்கு வியாக்கியானம் இயற்றினூரேயன்றி மணவாளமாமுனிகளியற்றிய நூல்களுக்கு வியாக்கியானமெழுதியவரல்லர். மிகமுற்பட்டவரான அவர் பிற்பட்ட நூலுக்கு உரையெழுதப்பிரசக்தியேயில்லையென்பது சொல்லவும் வேண்டுமோ? நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியாயிரத்தின் சாரப்பொருள்களைத் தொகுத்து மணவாளமாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியென்னுமொரு சிறந்தப்ரபந்தத்தை வெண்பாவிற் பாடியுள்ளார். அதற்குப் பெரிய வாச்சான்பிள்ளையெனுமாசிரியர் உரைசெய்ய ப்ரசக்தியேகிடையாது. அந்தநூற்றந்தாதி நூல் தோன்றுவதற்கு நூறாண்டுகட்குமுந்தியே விண்ணுலகமெய்திய பெரியவாச்சான் பிள்ளை அதற்கு உரையாசிரியராக அமையமுடியாதன்றே. அதற்கு ஸ்ரீ அண்ணங்கராசாரியார் ஸ்வாமிகள் உரையெழுதியுள்ளார் முதன் முதலாக, நானூறுவருடங்களுக்கு முற்பட்ட சீயரொருவரும் ஒருரை வகுத்துள்ளார். இவ்வளவே உண்மையாயிருக்க, முதலியார் போட்டிருக்கிற ஆகாயப் பந்தல்களை அந்தோ! என்னென்பது. கேண்மின்;

திருவாய்மொழி நூற்றந்தாதியின் 85-ம் பாட்டாகிய “இன்னுயிர்மால் தோற்றினது” என்னும் பாட்டின் ஈற்றடி

"உன னுமவாக குளளமுருகும" எனபது இதில் பாடப பிழையும பொருட பிழையுமிருபபதாக எழுதவெழுந்த முதலியார 165-ம பககததில ஆரமபிததுத தூசனைகளை எழுதிவருகையில 166-ம பககததில எழுதியுளள வாசகங்கள இவை– "உரையாசிரியா திருபபெரியவாச்சானபிளளை பணடு அககடையடியை 'உனனுமவாககுளள முருகு' எனவே பாடஙகொணடு அவவடிககு 'ஆழவாருடைய கிருபையை அனுசநதிபபவாகளுககு மனமே! உருகாநிறக — உருகுக' எனறே பொருள கொணடிருப்பா அவவாசிரியா உரை எழுதிவைததகாலததிறகுப பினனாத்தான திவ்வியபபிரபந் ததை ஏட்டில எழுதியவரோ அல்லது முதன்முறை அச சிடடவரோ 'உனனுமவாககுளள முருகும' எனறு பிழைப் பாடஙகொணடும அபபிழைபபாடத்திறகு ஏறறபடி பொருட் பிழையையும செறிதது அசசிட்டு வைததிருப்பா எனபதே என நமபிககை." எனறு

இதனால பெரியவாச்சான பிளளையெனனுமாசிரியா திரு வாயமொழி நூறறந்தாதிககு உரையிட்டதாகத தாபிககிறா முதலியார இபபடிபபடட அசமபாவிதமான மருளுரைகள அவரது புததகததில ஒனறலல இரண்டல்ல பெருமபாலும பககநதோறும காணபபடுகினறன

'ஆழவார்களின் பிரபநதங்களானவை பக்திமார்க்கததில தோனறினவை' என்றிவவளவே சாமானியமாக உலகம நினைததிருபபது தமிழ நூல்களாக உலகிறகாணும மறற நூலகளுககிலலாத ஒரு தனிசசிறபபு திவவியபபிரபநதங்களுக குளளது அது எனனவெனில், வடமொழி வேதாநதப பொருளகளை நிரமபக கொண்டிருக்குந் தனமையேயாம் இதறகு ஒரு பாசுரமே எடுததுககாட்டுகிறோம. திருவாய மொழியில (9—3—2) "அவனே அகன ஞாலம படைத திடந்தான, அவனே அஃதுணடுமிழநதானளநதான, அவனே அவனுமவனுமவனும, அவனே மறறெலலாமுமறிநதனமே." எனறுளள செயயுளானது தமிழறிஞாகளனைவாககும பொருள தெரிகிறுபபோல விருநதாலும, வடமொழி வேதாநதம் பயி லாதவாகளுக்கு இதில்சுவைநுகர்சசியுண்டாகாது. "அவனே அவனும அவனுமவனும்" என்று ஓடி முழுதும அவனுகவே

நிறைந்திருக்கிறாராழ்வார். எதற்காக இப்படி? என்ன பொருள் இதற்கு? என்று கேட்டால் வடமொழி வேதம் பயின்ற வைணவப் பேராசிரியர்களின் திருப்பாதகமலங்களிற் பணிந்து கேட்டவர்கட்கல்லது மற்றையோருக்கு இங்கு வாய் திறக்கவேமுடியாதென்பது கல்வெட்டாகும். “ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோऽக்ஷர: பரமஸ்வராட்” என்கிற வேத வாக்கியத்தில் [ஸ: ஸ: ஸ: ஸ:] என்றிருப்பதையே ஆழ்வார் மொழிபெயர்த்தருளியுள்ளார். ஸ: — அவன் என்றபடி. இதற்குமேல் இங்கு நாம் விவரணம் காட்டுவது தகாதென நிற்கிறோம். இப்படி வடமொழி வேதாந்தக கட்டளையிலே பொருள் காணவேண்டுமிடங்கள் பலபலவுண்டு. அவ்விடங்களில் முதலியார் போல்வார் கைகூப்பி வெகு தூரத்தில் நிற்கவேண்டியவர்கள் என்று சொன்னால் இதை ரோஷமில்லாமல் ஏற்றுக்கொள்ளவேண்டியது தவிர வேறு வழியில்லை முதலியார்க்கு. இன்னார்தான் இன்ன விஷயத்தில் ஆராய்ச்சி செய்யத்தகும் என்று ஒரு வரம்புள்ளதன்றோ. இந்த தத்துவத்தை முதலியார் உள்ளவாறு தெரிந்து கொண்டால் ‘வைணவாசாரியர்கள் வடமொழி, தென்மொழி விரவிய மணிப்பிரவாள நடையில் திவ்வியப்பிரபந்த வியாக்கியானங்களை எழுதிவிட்டார்களென்று வசை கூறுவதை விட்டேதீருவர். வடமொழி கலக்காமல் வியாக்கியானம் செய்யக்கூடிய நிலைமையில் திவ்வியப்பிரபந்தங்கள் இல்லையே. திவ்வியப்பிரபந்தங்களின் உண்மைப் பொருள்களை முதலியார் உணரவிரும்பினால் உபயவேதாந்தப் பிரவர்த்தகாசாரியர்கள் என்று மதிக்கப்படும் நல்லாசிரியர்களின் திருவடி நிழலில் வெருகாலம் வாழ்ந்திருந்தல்லவோ அறியவேணும். அங்ஙனம் அறிய முயலாதேதோடு, அறிந்த பேரறிவாளர்களைச் செவிசுடும் வசவுகளினால் வைதிருப்பதும் அடாத செயலன்றோ.

முதலியாரவர்களின் புத்தகத்தை நாம் கண்டபோது, வெகு அசந்தர்ப்பமான வசை மொழிகள் மலிந்த இப்புத்தகத்தைப் பொருள்படுத்தி யார் மறுப்பெழுதப்போகிறார்கள்! என்று நினைத்தோம். ஸ்ரீ அண்ணங்கராசாரியா சுவாமிகளைப் பற்றிய நிந்தைகளும் அவரது திவ்யார்த்த தீபிகையுரையைப் பற்றிய தூஷணைகளும் அளவு மீறி வெளிவந்திருப்பதனால் அந்த சுவாமிகளோ அவரது சீடர்களோ உலகுக்கு உண்மையை

எடுததுக்காட்டாது விடுவர்களோ! எடுத்துக காட்டவே நேருமென்றும நினைததோம அப்படியே சுவாமிகளாலும அவரது சீடர்களாலும வெளியிடப்பட்ட நூலகளை வரப் பெறறேம முறையே, நான் கணட நலலது, திவயாரதத தீபிகைசசிறபபு எனனும பெயருடையன அவை கடுஞ சொலமயமான முதலியாரது நூலுககு மறுபபுரையாகத தோனறின இவவிரு நூறகளிலும கடுஞ சொலலாக ஒரெழுததும இடம பெறுதிருப்பது முதற பெருமை; தமிழுலகம தலையாலேறகக்கூடிய மேறகோளகளையே நிரமபக காட்டி முதலியாரது ஆட்சேபஙகளையெலலாம அகறறியிருபபது இரணடாம பெருமை. இவவிருவகைபபெருமைகளும தமிழறிஞரனைவருடையவும் உளளததைக கொளளை கொளகினறனவென்பது ஆசசரியமனறு.

சில பெரியார்கள தமது நூலுக்குச் சிறப்புரைதநததாக முதலியாரவாகள வெளியிடடிருப்பதும் ஐயுறததககதே அவற்றிலுளள வாசகஙகள பலவும முதலியாருடைய வாசகஙகளில வாசியறறிருபபதனல இவர் தாமே எழுதிககொணடு அவர்களிடம கையெழுததுப பெறறிருகக வேணடுமென்றே அறிஞா நினைககக கூடியது. அவாகளே வியநது மகிழ்ந்து எழுதிய சிறப்புரைகளாயிருநதால, சுவாமிகள வெளியிட்டுளள நான கணட நலலதெனனும் நூலை அபபெரியார்கள ஆழநது ஆராயநது தாம முனபு கொணடிருநத கொளகையை அறவே மாறறிககொளளக கடமைபபட்டவாகளேயாவா. அலலது, வீணான நிநதைகளை விலககி விஷயஙகளுககுத தகுநத பதிலுரைகளையாவது நடுநிலைமைவாயநத உலகுககு உணாத்த வேணடுமவாகள முதலியாருடைய ஆராயச்சிகளில, அஞ்சலோதியைப பறறிய ஆராயசசியும் எண்டோளீசறகெழிலமாடமெழுபது செயதுலகமாண்ட செஙகணன் கோச் சோழனைப பறறிய ஆராயசசியும பாராட்டததககனவென்று சிறப்பாக எடுத்துக்கூறியுளள சிறபபுரைகாரர்களுககுச சுருககமாகச சொலலுகிறேம அஞசலோதியைபபறறி மிகவும அழகிய முடிவை ஸ்ரீஸவாமிகள காட்டியுளளாாகள. அம் சில ஓதியையென்றேயிருகக வேணடுமென்னும பிடிவாதமுடையார் நன்னெறிநின்று பதில கூறவேணடும. ‘சினமொழி’ எனனுஞ சொலலைத திருவிருத்ததில நமமாழவாா கையாண்டிருககிறா.

சிலமொழிகளையே பேசவல்ல சிறு குழந்தையென்பது இதன் பொருள். இப்பொருளிலேயே ஆழ்வார் பிரயோகஞ் செய்திருக்கிறார். சில் ஓதி என்கிற அன்மொழித் தொகையும், சில தலைமயிர்களையேயுடைய சிறு குழந்தை என்று தான் பொருள்பட்டுத் தீரும். சீதாபிராட்டி அசோகவனத்தில் இருக்கும்போது இத்தகைய சிறு குழந்தைப் பருவமாயிருந்தால் அஞ்சிலோதியென்றே பாடத்தைத் தாராளமாகத் திருத்தலாம், இதை ஸ்ரீஅண்ணங்கராசாரியர் சுவாமிகள் 31, 32, 33 பாராக்களில் பன்னியுரைத்திருக்கின்றார். இதுவே மிக மெச்சத்தக்க ஆராய்ச்சியாகும்.

ஸ்ரீஜகத்குரு காமகோடி சங்கராசாரியர் சுவாமிகள் தமது உபந்யாஸத்தொகுதியில் "நமது தேவாலயங்கள்" என்ற பகுதியில் செங்கணான் கோச் சோழனுடைய மூற்பிறவிச் செய்தி முதலாக விரித்தெழுதி அவ்வரசன் எழுபது சிவாலயங்கள் கட்டிவைத்ததையும் திருமங்கையாழ்வார் அவனைப்பற்றிப் பாடியிருப்பதையும் எடுத்துக்காட்டி, ஸ்ரீ அண்ணங்கராசாரிய சுவாமிகள் பெரிய திருமொழிப் பாசுரத்தின் திவ்யார்த்த தீபிகையுரையில் எழுதியுள்ளவற்றிற்கு விரிவான வியாக்கியானம் போலவே எழுதியச்சிட்டிருப்பது உலகமெங்கும் பரவியுள்ளது. அதைக்காணுமறிவுடையார், எண்டோளீசன் விமர்சனத்தில் சுவாமிகளின் வழியையே பின்பற்றுவார்களென்பதில் ஐயமில்லை.

முதலியாருடைய ஒவ்வொரு மறுப்பும் நேர்மையான ஆதாரமற்றதும் பிராமாணிகங்களான தமிழ் நூல்களின் சித்தாந்தங்களுக்கு மிக முரண்பட்டதுமாமென்பதை நன்கு நிரூபிக்கின்றது 'நான் கண்ட நல்லது.' உலகம் நிறைந்த புகழாளர்களான தியாகராச செட்டியாரவர்களும், மஹாமஹோபாத்தியாய சாமிநாதையரவர்களும் ஸ்ரீவைஷ்ணவ பரமாசாரியர்களின் வியாக்கியானங்களை நல்லாசிரியர்களின் திருவடிகளிற் பணிந்து கேட்கப்பெற்றதனால் அவர்கட்கு திவ்வியப் பிரபந்தங்களிலும் வியாக்கியான நூல்களிலும் அளவிறந்த பக்தியிருந்ததென்பதை யாவருமறிந்து மகிழும் வண்ணம் விரிவாக நிரூபணம் செய்திருப்பதே நான் கண்ட நல்லதுக்குத் தனிச்சிறப்பு.

ஸ்ரீமத் வேதவ்யாஸ திருமலைபட்டர் சுவாமிகள்,
பட்டர் திருமாளிகை, கோயமுத்தூர்.

ஸ்ரீ ஃ

அஸ்மத் குருப்யோ நம ஃ

# நான் கண்ட நல்லதில் யான் கண்ட தீயது.

சென்னை ஸத்காரந்த பாகாசந ஸபையால வெளியிடப் படும "ஸ்ரீராமாநுஜன" என்கின்ற பத்திரிகையின 15 வெ சஞ்சிகையில "நான கண்ட நலலது," "திவயார்த்த தீபிகைச் சிறபபின முனனுரை," "திவயார்த்த தீபிகைச் சிறபபு" எனனும மூனறு வியாசஙகளைப படிக்க நோந்தது முனனது காஞ்சீ, ஸ்ரீ உ. வே மஹா விதவான P B. அணணஙகாா சாாய சுவாமிகளாலும, இடையது T. T பாஷயமையஙகாா எனபவராலும, பினனது காஞ்சீபுரம T N C திருவேங கடாசாாயா எனபவராலும எழுதப்பெறறுளளன அவை, பெரிய காஞ்சீபுரததில எணணெயககாாத தெருவில வசிககும வே மு சீனிவாச முதலியாா எனனும ஒருவா அசசிடடுப பரவசசெயதுவருமா 'திவ்யப பிரபநதமும, திவவியாாதத தீபிகையும" என்கின்ற ஒரு ஆயவுரையை ஆராயத தோன றியவையாயுளளன அவவாயவுரையில ஸ்ரீ அணணஙகாா சாாய சுவாமிகளின தமிழறிவைத தூறறியும அவரால வெளி யிடபபடடுளள "திவ்யாாதத தீபிகை" யுரையில குறறங் குறைகள கறபிதது நிநதிததும, திவவியப பிரபநத வியாககி யானஙகளில தவறுன பாடஙகள புகுநதுளளவாகக கூறி முறை யறற பல திருததஙகளை யேறிடடும, வியாககியானஙகளை யருளிய பேராசிரியாகளைத தமிழறியாதாா எனறு இகழநதும உளளது

ஒருவா, தாம் ஒரு காரியததை மேறகொளளத துணியுங கால அதறகுரிய தகுதி தமககிருககினறதா எனபதைத தெரிநது அறுதியிடடுககொளவது முதறகடமையாகும; தம மால செயயபபடட எககாரியததையும அவவததுறையில ஆழநத அறிவும அநுபவமும உடைய பெரியோரைககொணடு ஆராயநது அறுதியிடல இரணடாவதாகும, பின்னரே, அதனை யுலகுககுப பயன தாததக்க வகையில, வழுவினறி, தூய நடையில வெளியிடல முறையாகும.

நமது சீனிவாச முதலியாரவாகள் இமமுறையைக கைக கொண்டவாாகச சிறிதும தெரியவிலலை. ஆததிாததால

ஆழமறியாது இறங்கிவிட்டாரென்றே அறியக்கிடக்கின்றது. திவ்வியப் பிரபந்தம் என்பது யாது? அதன் ஏற்றம் என்ன? அதனையருளிய கர்த்தாக்களாகச் சொல்லப்படுகின்ற ஆழ்வார்கள் யாவர்? அவர்கள் ஏற்றம் என்ன? திவ்வியப் பிரபந்தத்திற்கு அமைந்துள்ள வியாக்கியானங்களின் அருமை பெருமைகள் என்ன? அவற்றைச் செய்த பேராசிரியர்களின ஞானப்பெருமை யாது? என்பனவற்றை அவர் சிறிதும் தெரிந்துகொள்ளாதவர்; தெரிந்துகொண்டிருந்தும் அசூயையினால் அவற்றை மறந்தவர் என்றுவது கொள்ளவேண்டும். ஆதலால்தான் * வானிடை வாழுமவ் வானவர்க்கு மறையவர் வேள்வியில் வகுத்த வவி, கானிடைத் திரிவதோர் நரி புகுந்து கடப்பதும் மோப்பதுஞ் செய்வதொப்பத் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களிலுள்ள பாடங்களை மனம் போனபடி திருத்துவதும் அப்பாசுரங்களுக்கு வியாக்கியானங்கள் செய்தருளிய பேராசிரியர்களைப் பலவாறு நிந்திப்பதுமாகின்ற ஆபாசச் செயல்களைச் செய்துவிட்டார். அதனால் அவர் என்ன பெருமையை யடைந்தவராவர்? அருளிச் செயல்களுக்கும், அருளிச்செயல் வியாக்கியானங்களுக்கும், அவற்றையருளிய முற்றறிஞர்களான பேராசிரியர்களுக்கும் என்ன சிறுமையை அவர் விளைவித்தவராவர்? "காருள்ளளவும் கடல் நீருள்ளளவும், வேதமுள்ளளவும் வேத கீதனுள்ளளவும்" குன்றாப் பெரும்புகழன்றோ அவர்களுக்கும் அவர்கள் திவ்ய ஸூக்திகளுக்கும் உரியது?

முதலியாரின் அப்புத்தகத்தை ஆவலோடு வாங்கிப் படிப்பாரில் ஒரு சிலர் அதில் இன்சுவை யிருப்பதாக மயங்கிப் பருகிக் களிப்பாரும் அதனை யாதரிப்பாரும் இருக்கலாம். அதனாலென்? நடு நிலை நோக்குடைய உத்தமப் பேரறிஞரும் பலர் இவ்வுலகத்துளரே. "முதுகாட்டிற் காக்கை யுகக்கும் பிணம்" என்பதன்றோ அவர்கள் துணிபு.

சொற்களையும் பொருள்களையும் ஆராய்ச்சி செய்வது சிறந்த பணிதான். ஆனால், அதற்குத் தகுதியுடைமை இன்றியமையாததன்றோ? அதனைப் பெறுதற்கு நுண்ணிய நூல் பல கற்றல், கற்கப்படும் நூல்களை ஐயந் திரிபற மெய்ப்பொருளை, ஓதியுணர்ந்த நல்லோர் பலருடன் பலகாலம் பயிலல், தன்னோடொத்தார், ஆசிரியன், பெரியோர் இவர்களோடு பழகிப்பழகி

அப்பழக்கத்தால் கேள்வி யறிவுகளைப்பெறல், முதிர்ந்த அநுபவ அறிவு ஆகிய இவை முதலியன வேண்டுமன்றோ ? சிறிது படித்த மாத்திரத்தாற் போதுமோ ? தோண்டிய அளவுக்கேற்ப மணலில் நீர் சுரப்பதுபோல படித்த அளவுக்கேற்பத் தானே மனிதரிடத்தில் அறிவு தோன்றும்

அவ்வாறாயின், நமது முதலியார் கல்வி கேள்வி யறிவுகளிற் குறைந்தவரா ? நன்றாகப் படித்தவராகத்தானே தெரிகின்றது. இன்றேல், அவர் நூலாராய்ச்சித் துறையில் இழிய இயலுமோ ? என்கின்ற ஒரு வாதமும் எழும் உண்மையே ஆனால், பொருளின் மெய்ம்மையைத் தாமும் நுண்ணிதாக அறிந்து, கற்ற பெரியோரிடம் நூற்பொருளைக் கேட்டு, அவற்றுடன் தாம் முன்னறிந்த நூற்பொருள்களை ஒத்திட்டுப் பார்த்தலாகு செய்கையாகின்ற கல்வி கேள்விகளையுடையார், தாமச குணத்தால் மயங்கினராயினும், மயங்கினமாத்திரமேயொழிய, நூற்பொருளுக்கு மாறுபாடானதைச் சொல்லமாட்டார், அதாவது, மாறுபாடாக அறிந்தபொழுதும் தமக்கு அறிவின்மையைக் கொடுக்கும் நூற்பொருள்களைச் சொல்லார் என்பது தமிழ்மறைத் துணிபு. "பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லாரிழைத்துணர்ந்தீண்டிய கேள்வியவர்" என்றுள்ளது காண்க முதலியார், தமது புத்தகத்தில், பேராசிரியர்கள் கூறிய பொருளும் பிசகு, கொண்ட பாடமும் தவறு என்றெழுதிப் பாடங்களை மாற்றியிருப்பதையும், பேராசிரியர்கள் பேரறிவுகொண்டும் பேருள் கொண்டும் பணித்த பொருள்களைப் போலிப்பொருள்களென்ன நிந்தித்திருப்பதையும், அவர்களது உரை நடையை கருவேப்பிலை விற்கும் குறத்தி மொழியென்று ஏசியிருப்பதையும் நோக்குங்கால் அம்முதலியார் கல்வி கேள்வியறிவற்றவரென்றே யறிதற்பாலதாம்

திவ்வியப் பிரபந்தங்களுக்கு வியாக்கியானங்களை யருளிச்செய்த* பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, தெள்ளார் வடக்குத் திருவீதிப் பிள்ளை, மணவாளயோகி முதலான ஆசிரியர்களினுடையவும், அவ்வாசிரியர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து திருக்கோலங் கொண்டபடியோ ! என்று அனைவரும் நினைக்கும்படி அவதரித்துள்ள ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரிய சுவாமிகளுடையவும் வடமொழி தென்மொழி வல்லமையை அளவு காண்பதற்கு இக்காலத்தில் அதிகாரிகள் யாருமிலர்

என்பது நாடும் நகரமும் நன்கு இசைந்த விஷயம். தமிழுலகில் பெருமை வாய்ந்த பெரியார் பலரும் சுவாமிகளின் திவ்யார்த்த தீபிகையுரையைக் கொண்டாடி யிருப்பது உலகங் கண்ட தொன்றும்.

பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களிற் போலவே இவரது உரைகளிலும் வடமொழிக் கலப்பு உள்ள தென்று குறை கூறியிருக்கின்ற முதலியார்க்கு இங்கு உண்மை யுணர்த்த வேண்டியது அவசியமாகின்றது. ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்கள் வெறும் பக்தி நூலாக மாத்திரமல்லா மல் அரிய பெரிய வேதாந்த நூலாகவும் அமைந்துள்ளன. வடமொழி வேதாந்தக்கடலில் ஆழ இழிந்தவர்களும் இத்திவ் வியப் பிரபந்தங்களின் உதவிகொண்டே அவ்வுபநிடதங்களின் உட்பொருள்களை அறிந்ததாக ஆசிரியர்கள் அறைகின்றார்கள். வடமொழி வேதக்கடலில் அளைந்து துளைந்து அரிய இரத் தினங்களைக் காண்பவரான வேதாந்த தேசிகர் என்னும் ஆசிரியர் "செய்யதமிழ் மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" என்று ஆழ் வார்களின் திவ்வியப் பிரபந்தங்களைக் கொண்டே வடமொழி வேதாந்தப் பொருள்களைத் தாம் தெளிந்து கொண்டதாகக் கூறியுள்ளாரென்றால் அத்திவ்வியப் பிரபந்தங்களின் பெருமை யை என்னென்பது! வேதப்பொருள்களெல்லாம் திவ்வியப் பிரபந்தங்களில் பொலிகின்றன வென்றன்றோ பெரியார் கண் டிருப்பது. அப்படிப்பட்ட தமிழ் வேதங்களுக்கு உரைசெய்வ தென்றால் வேதங்களையும், இதிகாசங்களையும், புராணங்களையும், பாஞ்சராத்திர ஆகமங்களையும் மநு முதலிய நீதி நூல்களையும், மற்றும் பலவற்றையும் புகுத்தாமல் எப்படி உரை செய்ய இயலும்? உரை செய்யப் புகுந்த ஆசாரியர்களும் முற்றறி ஞர்கள்; உரை செய்யப்படவேண்டிய பிரபந்தங்களோ முற்றறி ஞர்களே வாய்வைக்க வேண்டியவை. இந்நிலையில், திவ்வியப் பிரபந்த உரைகளில் வடமொழிக் கலப்பு உள்ளதென்று நிந்தனை செய்தால் இதைப் பண்டித உலகம் ஏற்குமோ? தமக்கு அப்பொருள்களைத் தெரிந்துகொள்ளும் அறிவும் பாக்கியமும் அமையவில்லையே யென்று முதலியார் தம்மைத் தாமே வெறுத்துக் கொள்ள வேண்டுமே யொழிய அறிஞர் களை அவதூறு செய்ய எள்ளளவும் இடமில்லையே.

பூருவாசாரிய வியாக்கியானங்களுக்கும் அண்ணங்கராசாரிய சுவாமிகளின் உரைகளுக்கும் உலகம் கண்டிருக்கிற வாசியென்ன வென்றால், முன்னோருரைகள் வடமொழி மயமாகவே காணப்படும், இருமொழிகளிலும் வல்லமை பெற்ற வித்துவான்களுக்கே அவை நிலமாகும். அண்ணங்கராசாரிய சுவாமிகளின் உரைகள் அப்படியல்லாமல் பெரும்பாலும் தமிழ் வழக்கேயாய், இன்றியமையாத விடங்களில் வடமொழி கலந்துள்ளன. வடமொழி மேற்கோள்களையும் வடநூல் வழக்குகளையும் காட்டியே தீரவேண்டு மிடங்களில் வேறு எவ்விதமாக எழுதமுடியும்?

தமிழுலகம் கொண்டாட நின்ற தியாகராசச் செட்டியாரவர்கள் பூருவாசாரிய வியாக்கியானங்களை நல்லாசிரியர்பால் கேட்டு அவற்றில் அதிக ஈடுபாடு கொண்டவர். அவருடைய காலத்தில் சுவாமிகளின் திவ்யார்த்ததீபிகையுரை அவதரிக்கப் பெற்றதில்லை. அந்த தியாகராசச் செட்டியாரைக் காட்டிலும் சிறந்த வித்துவானாகி விளங்கிய மஹாமஹோபாத்யாய சாமிநாதையரவர்கள் பூருவாசாரிய வியாக்யானங்களிலும் சுவாமிகளின் திவ்யார்த்த தீபிகை யுரையிலும் ஆழ்ந்து அளவு கடந்த ஈடுபாடு கொண்டவர். அப்படிப்பட்ட பெரிய மேதாவிகள் பலரும் பெருமை போற்ற நின்ற வியாக்கியானங்களில், அழுக்காறே வடிவெடுத்த முதலியார், தம் நிலையைத் தாமறியாது, குற்றங்குறைகள் கூறுகின்றாரெனின் இது இரவியின் ஒளியைக் கையால் மறைக்க நினைப்பதொக்கு மன்றோ?

சுவாமிகள் தமது நூலுக்கு "நான் கண்ட நல்லது" என்று திருநாமமிட்டு, ஒருவருடைய மனமும் கன்றாத வகையில், பொருள்களைப் பூப்பறித்தாற் போல எழுதியிருக்கின்றார். ஆயினும், பூருவாசாரியர்களையும் அவர்தம் அமுதமொழிகளையும் அளவு மீறி நிந்தித்தும் பரிகசித்தும் எழுதியுள்ள முதலியாருக்கு, தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் "கூடுமேல் தலையை யாங்கே" என்று காட்டிய முறையில் சிறிதாகிலும் சூடுகாட்டி யெழுதவேண்டிய அவசியமிருந்தும் சுவாமிகள் சிறந்த சாத்விக முறையில் எழுதியிருப்பது நன்றன்று என்று அடியேனுக்குத்தோன்றினமையால் இந்த வியாசத்திற்கு "நான்கண்ட நல்லதில் யான்

கண்ட தீயது" என்று மகுடமிட்டேன். உண்மையில் உலகம் புகழ வமைந்த அந்நூலில் அஃதொன்றே தீயது.

முதலியார் உண்மையில் கற்றறிந்த பெருந்தகை யாளரா யிருந்தால் ஸ்ரீ சுவாமிகள் விரிவாகவும் சாரமாகவும் காட்டி யருளியுள்ள சமாதானங்களினால் தாம் மருள்நீங்கி, இருள் தொலைந்து உய்யப் பெற்றமையை உலகுக்கு விளங்கக்காட்டி நிற்பதே நன்றாம். இல்லையேல், சுவாமி எழுதியிருக்கின்ற பொருள்களுக்கு ஒரு வகையான வசவு மில்லாமல் அறிஞர் யாவரும் ஏற்க பதில் எழுதட்டும். இவ்விரண்டு வழிகளையும் விட்டுப் பழைய இயல்பையேகாட்டி இன்னமும் நிந்தைகளைப் பொழியவே முன்வருவாராயின், அவரைச் சிட்சிக்க உலகம் எல்லாம் ஊக்கங்கொண்டு கிளரும் என்பதில் ஐயமில்லை.

ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல்வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

ஆசாரியன் திருவடிகளே சரணம்

N. துரைரங்கராமாநுஜ தாஸன்.
பாண்டிச்சேரி,
(பிரெஞ்ச் இந்தியா).

---

குறிப்பு :— இப்பெரியார் பல நூல்களியற்றி வெளியிட்டு உலகுக்குப் பேருதவி புரிந்திருப்பவர் என்பதை நினைப்பூட்டு கின்றேன்.

பதிப்பாசிரியர்.

ஸ்ரீ

# திவ்யப்ரபந்த
# திவ்யார்த்த தீபிகையாராய்ச்சிப் போக்கு.

திருவேஙகடேசுவரன கீழைககலையாராயசசிக கழகதது நூலநிலையததவாககுச சென றமாதம காஞசிபுரம எண்ணெயக காரதெரு திரு வே மு சீனிவாச முதலியார எனபவா ஒரு க டி த ம எழுதித தாம அணமையில வெளியிடட சில தமிழப புததகஙகளை இநநூல நிலையததுககு நனகொடையாக அளிபபதாகத தெரிவிததது அஙஙனமே மூ ன று தமிழப புததகஙகளை அனபுடன அனுபபினாாகள அவறறை யான் ஒரு முறை நோககினேன திரு முதலியாாவாகள எழுதிய திவயபிரபநதமும திவயாாதத தீபிகையுரையும எனற புததகததில பனனிரணடு ஆயவுரைகள பல கி ளை க ளு ட ன உளளன இவை நாலாயிர திவயபபிரபநதத திருப்பாசுரங களின பாடஙகளைப பறறியும அவறறிறகுக கா ஞ சீ பு ர ம ஸ்ரீமத பிரதிவாதி ப ய ங க ர ம மகாவிததுவான உ வே. அணணஙகராசாரிய ஸவாமிகள எழுதியுளள உரையைப்பறறியும எழுநதவையாகும இவறறை நோககிய யான காஞசி முதலியாா அவாகள கட்டுரைபறறிச சில உணமைகளைககூற வேணடி நோகினறது அவறறைத தமிழறிஞா நோககிறகுக கீழே குறிககினறேன

முதலாவது, பணடை நூலகளின பாட சோதனையில புகும ஆராயசசி நலலறிஞா எவரும ஒரு நூற செயயுட பாடததின பொருததமும பொருததமினமையும நோககுதறகும, பாடாந்தரஙகளைத தாம தெரிநது கொள்ளுவதறகும பிற பணடை ஏடடுச்சுவடிகளைத தாம கணணுறறு அவறறுட் கணட பாடாநதரஙகள பொருட சிறபபால பொருதத முறறதாயின அவறறைததுணிந்தும, அலலதாயின புறககணிததும தோநது கொளளுவதே அடிப்பட்ட வழககம் ஆகும். நம தமிழ நாட்டில இதுவரை பல நூறபதிபபுச செயத பெரியாாகள யாவரும இமமுறையே கைககொணடுளளாாகள் எனபதனை அவாகள நூறபதிபபுகளைக கணணுறற அறிஞா யாவரும உணாவா அவறறைபபடி பபாரும பாடபபொருததமும திருததமும பணடைச்சுவடிப் பாடாநதரப் பிரமாணங் களைககொணடே தாம தோநதுகொளளுவதும தமிழறிஞா உலக வழககாம ஆகவே பாட சோதனை செயவார்ககும

சோதனை செய்யப்பட்ட பாடங்களை ஏற்பார்க்கும் பண்டைச் சுவடிகளின் பிரமாணங்கள் இன்றியமையாது வேண்டப் படுவன ஆகும். இங்ஙனமாகவும் திவ்யப்ரபந்தத் திருப் பாசுரப்பாட சோதனம் செய்த முதலியாரவர்கள் தாம் கூறும் பண்டைப்பாட பொருத்தமின்மைக்காவது தாம் நூதன மாகக்கூறும் பாடப்பொருத்த முண்மைக்காவது எத்தகைய ஏட்டுச்சுவடிப் பிரமாணமும் உண்டென்று காட்டாமல் தமக்குத் தோற்றியவாறே பாடமாற்றங்களையும் அவற்றின் ஏற்றங்களையும் தாமே காட்டிக் கூறித் தாமே அவற்றை மதித்துத் தேற்றிக் கொள்ளுகின்ற நடப்பு தமிழ்ப் புலவர் புலமை நெறிக்கு முற்றும் ஒவ்வாததிறம் ஆகும். திருவாசக முதல் திருப்பாட்டுத் திருத்தங்களும் இவர்கள் இவ்வாறே செய்துள்ளார்கள். பண்டைச்சுவடி நூல் நிலையங்களுள் பன்னூறாண்டுச்சுவடிகள் பல இன்னும் அழிவெய்தாமல் அப்பாடங்களையே கொண்டிருத்தலைக் கண்பெற்ற அறிஞர் காணலாகும். முதலியார் அவர்கள் கூறும் பாடங்களை யாண்டும் காணுமாறு இல்லை. ஆகவே அவர்கள் பாட சோதனம் நெறிப்பட்ட சோதனம் ஆகாது. அதன்மேல் எழுந்த உரைத்திறத்துச் சாதனமும் ஆகாது என்பதனை அவர்கள் அறியாதது என்னோ? ஆதலால் அவர்கள் ஆய் வுரைகள் எல்லாம் ஆய்வுரையாகாது வெறுங்காய்வுரைகளே யாகின்றன.

இனி முதலியாரவர்களின் உரைத்திறம் பற்றியும் சிறிது கூற வேண்டியிருக்கிறது. தமது திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை ஆய்வுரைப் புத்தகத்தின் 111-ம் பக்கம் ஒன்பதாவது ஆய்வுரை-கிளை-10-ல் "தையொருதிங்களும்" என்ற ஆண் டாள் திருப்பாசுரத்தை எடுத்துக்கூறி இதற்கு ஸ்ரீமத். பிரதி வாதி பயங்கரம் உ. வே. அண்ணங்காசாரியாரவர்களின் செவ்விய உரையையும் திருப்பாசுரத்தின் பாடத்தையும் பழித்தும் இழித்தும் சில உரைகள் கூறி அதன் இறுதியில் "இருக்காதிவேத ஆகம புராணங்களை ஒப்புக்கொண்ட ஆசிரியன்மாருள் ஒருவரும் 'காமனுக்குத் தம்பி எனச் சாமன் என்பான் ஒருவன் உளன்' என்று உரைத்து வைத்திலர் ஆதலால் காமனுக்குத் தம்பி சாமன் என்பவன் என எந்நூலகத்தும் இயம்பிவைத்திலர்" என்று பெருந்துணி

வுடன் எழுதியிருக்கிறார்கள் இவர்கள் இத்திருப் பாசுரத்தின் பழம்பாடமாகிய "உம்பியையும்" என்பதற்கு மாறாக 'உம்மியையும்' எனப் புதுப்பாடம் ஓதி அதற்கு 'உம்முடைய உடைமையையும்' என்பது பொருள் ஆகும் என்று எழுதியுள்ளார்கள் இவர்கள் 'உம்மி' என்ற சொல் வழக்கை எந்நிகண்டு, எந்நூல், எவ்வகராதிகளில் கண்டு அறிந்தார்களோ? தெரியவில்லை இவர்கள் சொந்தப்படைப்பு மொழியாகக் கூறுவார்கள் போலும் இது நிற்க இவர்கள் எந்நூலக்கத்தும் காமன் தம்பி சாமன் என்பான் இல்லை என்பதனை வலியுறுத்துதற்குச் சீவக சிந்தாமணியில் நாமகளிலம்பகத்துள் 43-ம் பாடல் ஆக வந்துள்ள

> "மாமனும்மருகனும் போலு மன்பின
> காமனுஞ் சாமனுங் கலந்த காட்சிய
> பூமனு மரிசிப்புல்லாந்த மோட்டின
> தாமின மமைந்து தந்தொழிலின் மிக்கவே"

என்பதனைக் கூசாது இடைச்செருகல் என்று கூறியொழித்து விட்டார்கள் மேலும் சுரமஞ்சரியாரிலம்பகத்துவரும் காமன் வரலாறும் சமஞ்சிரியாக்கு உடம்பாடன்மையின இடைச்செருகல் என்று மழுப்புகிறார். ஆகவே தாம் சீவக சிந்தாமணியை முற்றும் நோக்கிவிட்டுத் துணிவுடன் கூறியொழித்ததாக எண்ணுகிறார்கள். ஆனால் அச்சீவகசிந்தாமணி நூற்கண்ணே கனகமாலையாரிலம்பகத்தில் 159-ம் பாடலாக

> "தூம மாாந்த துகிலணைப்பள்ளிமேற்
> காமன்றம்பியிற் காளை கிடந்தபின்
> ஏமமா புரத்திட்டதோர் மாதெய்வ
> நாம நல்லொளி நந்தனை யென்பவே"

என்று வந்துள்ள பிறிதொரு பாடலாகிய இதனில் "காமனுக்குத்தம்பி" உள்ளன என்று கூறியுள்ளதனைக் கண்டிலர் போலும்.

அன்றியும் பழந்தமிழ்ச் சங்கநூல் ஆகிய கலித்தொகையில் மருதம் 29-வது பாட்டுள்

"யானையெடுத்து நிறுத்தற்றூற் றேளிரண்டும் வீசி
யாம் வேண்டேமென்று விலக்கவுமெம்வீழுங்
காமர் நடக்கீது நடை காண் கவர்கணேச்
சாமனூர் தம்முன் செலவு காண்க"

என்று தெளிவுறக் காமனுக்குத் தம்பியாகச் சாமன் உளன் என்று குறிக்கப்பெற்ற செய்தி முதலியாரவர்கள் முற்றறிவில் தெற்றெனத் தோன்றாமை என்னோ?

இனி, கம்பராமாயணம் உத்தரகாண்டம் அசுவமேத யாகப்படலத்தில் 147-வது பாடல் ஆகிய

கனிதரு பவளச் செவ்வாய்க் காமனுஞ் சாமன் றனும்
முனிவர் தம் வடிவங்கொண்ட முறைமையதாகுமென்னப்
பனிமலர் வேணி சாத்திப் பருவரை யருவி போல
இனியவெண் புரிநூன் மார்பிலிலங்கிட வலங்கரித்தார்"

இதனுள் காமனும் சாமனும் என்ற இருவர் தமையன் தம்பி யாக உள்ளார்களெனக் கூறியிருப்பதும் மலையிலக்கு ஆக இருக்கத் தமிழறிஞர் முதலியார் அறியாராயினமை வியப்பாக உள்ளது. மேலும் வில்லிபுத்தூராழ்வார் பாரதம் ஆதிபருவம் அர்ச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம் 27-ம் பாடல் ஆகிய

" முன்னுருவந்தனை மாற்றி முகில்வாகன் றிருமதலை மோகியாகித்
தன்னுருவந்தனைக்கொண்டு சாமனிலுங் காமனிலுந்தயங்கு
மெய்யன்'

என்ற இதனுள்ளும் காமனும் சாமனும் உள்ளனர் என்று கூறியிருப்பது முதலியாரவர்கள் தேர்ந்துகொள்ளாமை என்னோ? முதலியார் அவர்கள் எந்நூலினும் காமன் சாமன் வரலாறு இல்லை என்று சாதித்த இச்சாதனை யான் ஈண்டுக் காட்டிய பன்னூற்சோதனையால் நீங்கி அவர்களுக்கு ஏற்ற போதனையாம் என்பதும் அவர்கள் வெறுங்கூற்று வெட்ட வெளிச்சமாய்விட்டது என்பதும் நன்கு அறியலாகும். ஆசிரியர் திருவள்ளுவ நாயனார்

" கல்லாத மேற்கொண்டொழுகல் கசடற
வல்லதூஉமையந்தரும்."

என்றருளிய மெய்யுரையைப் போற்றக்கடவர் முதலியா ரவர்கள்.

முதலியாராவாகள மறறொரு திருபபாசுரததுககு உரைதத வெறறுரையின தனமையும அவாகள தமிழ நாடடுச சரிதச் செயதிகளை ஒரு சிறிதும் அறியாதாா என்பதனைக காடடுகினறது. கோசசெஙகணணன் எனற சோழ மனனன் சிவபிரானுககுப பனமாடககோயிலகளைச சமைததனன எனறு திருமஙகையாழவாா அருளிசசெயத செயயுட பகுதிககு எழுதிய வெறறுரையைச சற்றேனும தேருா் தமிழகசசமய சரிதம அறிநதோா மேறகாடடியவாறு இககுறையையும் நான விரிததுககூறின் சோழ மனனர் செப்புபபட்டயங்களிற் காணும பல உணமைகளை எடுததுக காடடுதறகு இஙகு இடமிலலையென எண்ணி நிறுததுகினறேன

இனி முதலியாராவாகள ஸ்ரீ வைணவாசாரியாகள் கையாணட மணிபபிரவாள நடையைபபழிதது எழுதியதும தமிழ மொழி வரலாறு அறியாககுறையால நோநத மருட்சியாகும தனிததமிழ நடையின சிறபபு போறறததககதே; அதில ஐயபபாடு சிறிதும எவாககும இலலை பனனூறறாண்டு கடகு முனபு ஆரியததின சீரிய கலபபுத தென தமிழுககுச சிறபபென அககாலதது அறிஞாகொணடு இலககணததால அமைததுககொணடமை நாம இலககணவாயிலாய அறியக கிடககினறது ஆதலால பணடையோா செயலைப் பழிததுரைததல நனறு அன்று வீரசோழியம எனனும தமிழ இலககண நூல அககாலதது இககலபபு நடைவழககுணமையினைக கணடனறே

> "இடையே வடவெழுததெயதில விரவியல ஈணடெதுகை
> நடையேது மிலலா மணிபபிரவாள நறறெயவச சொலலின
> கிடையே முடியும பதமுடைததாம"

எனறு இலககணம உரைததுளளது இவவாறு அககாலதது அறிஞாகள பணடைய மொழி வழககின நடைகணடு இலககணம அமைததுளளமை காணின இதனைப பழிபபோா நல்லறிஞா ஆமாறு என்னையோ? இஃதனறி யாப்பருஙகல விருததியுரைகாராா இவவியலபினைககணடு இலககணவமைதி கூறுவாராய மேறகோள காடடிய பழஞசெயயுளையும ஈணடுக காணக.

"செந்தமிழ்ச் செய்யுட் டிறந்தெரிந்து செந்தமிழ்க்கண்
வந்த வடமொழியு மாற்றதே—சந்தம்
வழுவாமற் கொண்டியற்று மாண்பினோர்க்குண்டே
தழுவாமை நிற்குந் தமிழ்," (யாப்-விருத்தி. 94)

ஆதலின் ஆராய்ச்சியிற்புகும் நல்லறிஞர்க்கு இன்றியமையாது வேண்டப்படும் இயல்பினைப் பற்றிப் பண்டைத் தமிழறிஞர் ஒருவர் கூறியிட்டதனை ஈண்டுக்காட்டி முதலியார் அவர்களை இந்நல்லியல்புகளை மேற்கொள்ளுமாறு வேண்டிக் கொள்ளுகிறேன்.

காஞ்சீபுரம் மகா வித்துவான் P. B. A. ஆசார்ய சுவாமிகளின் உரை நூல்களைக் கண்டும் கற்றும் கேட்டும் உலகமெல்லாம் களிப்புறுகின்றது. அவற்றில் குறை கூறுவோரது சிற்றுரைகளால் சுவாமிகளின் பாற்கடல் போற்பரந்த பெருமைக்குக் கலக்குறுதலும் புரைபடுதலும் ஏற்படாதென்பது உறுதி.

காய்தலுவத்த லகற்றியொரு பொருட்கண்
ஆய்தலறிவுடையார் கண்ணதே—காய்வதன்கண்
உற்றகுணந் தோன்றாதாகு முவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும்.

தி. பொ. பழனியப்ப பிள்ளை, B. O. L.,
திருப்பதி.

---

குறிப்பு :—திருப்பதி 'ஸ்ரீவேங்கடேச்வர ஓரியண்டல் இன்ஸ்டிட்யூட்' கல்விக்கழகத்தில் தமிழ் நூலாராய்ச்சித் தலைவராய் விளங்குமிவர்கள் இயற்றியும் பரிசோதனை செய்தும் வெளியிட்டுள்ள நூல்கள் பலபல. தமிழாராய்ச்சியில் ஒப்புயர்வற்ற புகழ்பெற்று விளங்குமிவ்வறிஞர், முதலியாருடைய நூலை முற்றுங் கண்டித்து விரிவாக எழுதியுள்ள ஆராய்ச்சி நூல் அவசியமில்லையென்று அச்சிடாது நிறுத்தப்பட்டிருக்கின்றது.

பதிப்பாசிரியர்.

## திவ்யபரபநத வயாகயானப பேராசிரியா பெரும்புகழ்
## மதுரைத தமிழச சஙகப பரீகூஷகா
## பணடித மு முததுவேங்கடாசலமையா பாடியது

வடகலை தெனகலை மாறிலா இலககியம
தொடாபுடை இலககணம தோலாத் தருககநூல
எபபொருட கலையும எறறமொ டுணாந்து
நிலைகணட வாகளே நோமைசா லுளமொடு
பாரெலாம புகழும பழநதமிழ நூலகளாம
தொலகாபபியம திருவளளுவா கோவையாா
ஆதியாம நூலகளின ஆழபொருள கணடோா;
தெயவசசெநதமிழ செழிததிட உதிதத
ஆழவாா பாசுரத தாழபொருள கணடு
பூாவாசாரியா பொலிவுற வரைந்த
சுவை நலம பொதுளிததுலங்கு பேருரைகளில
பணடை நாள தொடடுப பாவலா பலரும
ஊறறு நீா போல உளள முருகுவா,
தமிழபபெரும புலவா சாமிநாதனாா
பதிதத நூலகளில பதபபொருட குறிபபில
"வைணவாசிரியா வழுததிய முறையிது"
எனன எழுதும இடமபல வுணடால;
அநநாள தொடடு இநநாள காறும
பொனனெனனப புலவா போறறிடு முரைகளை
நாககூசாது நலமில தெனறும
தமிழமா பறியா தவருரை யெனறும
அநதணா தமககென ஆககிய தெனறும
அஞசா துரைததனா ஆயவுரை யொருவா,
இனனருட குரவரை இகழ்நதிடு செயலால
எரிவாய நிரயத தேகுவரே யெனப
பரிவது ஒனறே சானறோா பணபால,
ஆஙகிலக கலைஞா அருநதமிழறிஞா
'ஏழுகட்டுரைகள' எனு நூல வரைந்த
செலவ கேசவ ராயனாா தாமும
வைணவ நூலகளின வளநதிகழ உரைகளைப

பல் காற்பயின்று "பா" எனுங்கட்டுரை
வரைந்துள தன்மையை மறப்பவர் யாரே?
உடையார் முன்னே வறியவ ரொப்ப
ஏக்கற் ருசான் இணையடி தொழுது
கற்றுச் சிறந்தலே கடப்பா டன்றி
முன்னோர் மொழியையும் முன்னோர் பொருளையும்
தன்மனப் போக்கால் தவறுடைத் தென்று
'நாட்டப் புகுவதும் நல்லதாய் விடுமோ?
'தளைதட்டற்' பொருட் டன்மையே யறியா
இவரோ ஆய்வுரை எழுதவும் தக்கார்?
தற்காலத்துத் தகவொடு விளங்கும்
உரையாசிரியர்கள் மருள்கொண் டுரைத்தனர்
அறிஞர் யாவரும் இப்பொருள் அறியார்'
என்று சுவடியை நிரப்பும் இவர், தமை
அகத்தியாகவே அகத்து நினைத்தனர்;
நாடுசெய் தவத்தால் நலமொடு திகழும்
அண்ணங்க ரார்யர் அகங்கனிந் தளித்த
திவ்யப்ரபந்த தீபிகை யுரைகளில்
வளந்திகழ் எளிய வடசொற்றழுவி
இனிய தீந்தமிழ் இணைந்துசெல் அழகைப்
பண்டிதர் கண்டு பரவச முறுவர்;
அழுக்காறு காட்டும் ஆய்வுரைச் சுவடியை
நடுநிலை பிறழா நல்லோர் காணின்
"அந்தோ! இவர்தம் அறிவு பிறழ்ந்ததே?
முன்னோர் ஆற்றலை முற்றுமுணராது
பழிக்கப் புகுவரே! அறிஞர் பலரையும்
மருள் கொண்டவர் என மருள் கொண்டுரைப்பரே!
என்னே!" என்ன இதயம் நொந்திடுவர்;
அன்பு வழிந்திலகு ஆழ்வார் மொழிக் கெலாம்
அருள் சேர்பட்டர் அருளிய சொல் நலம்,
நம்பிள்ளை யருளிய நற்பொருள், பெரிய
ஆச்சான்பிள்ளை யரும்பொருள், என்றால்
செந்தமிழ் கற்ற சீரியர் யாவரும்
மாபு பிறழா வகையினை யோர்ந்தும்
உருகி உருகி உறுபொருள் காட்டும்

செவ்வியை யுணர்ந்துஞ் சிரமிசைக் கைகுவித்(து)
ஆதரித்திடுவர்; அதனையுமுணர்ந்திலர்,
தெளியா மறைப்பொருள் தெளிவித்திடும்
செய்ய தமிழ்மாலை தெளிய விரும்புவோர்
வடமொழித் தொடர்கள் மலிந்தது கண்டு
அஞ்சுதல் செய்யார் அதன் பொருளுணர்ந்து
அநுபவித் துயர்வார், அவ்வழிச் சென்றிலர்;
ஒருமிடறாக ஓதிடுஞ் சொற்களின்
பொருளை மறுத்தும் புதுப்பொருள் காணச்
சொற்களைத் திரித்தும் துயருழந்திடுவர்,
வெண்பா இறுதியில் தனிக்குறில் நேரசை
வரினும் தவறிலா வகையு முணரா து
பாவைத் திருத்தும் பாதகம் பெரிதே;
காரிகையேனும் கசடறக் கற்பின்
இதுவிதி என்றும் இது விலக்கென்றும்
இது நேரென்றும் இது மாறென்றும்
உள்ளவா உணர்ந்து உயர்நிலை யடைவர்.
தன் நிலை அறிவு தகுதிதெரியாது
புலவர் நெஞ்சம் புண்படும் வகையில்
ஆழ்வார் மொழிகளை அகற்றிப் புதுமொழி
கோத்திடுந் தீய கொள்கை மேற்கொண்டார்;
அந்தமில் மறைகளில் ஆழ்ந்த அரும்பொருள்
செந்தமி ழாக்கத் திருத்திய பெரியார்
அண்ணங்க ராயர் அருட்கண் பெற்று
உண்மைப் பொருளை உள்ளவா றுணர்ந்து
அருந்தமிழ்த் தொண்டினை யாற்ற முற்படலே
ஆய்வுரை யாளராக் கமைந்த காரியமால்,
'நான் கண்ட நல்லது' என்னு நன்னூலில்
உபதேச முகத்தான் உண்மைப் பொருள்களை
வாரி வழங்கிய வள்ளன்மை கண்டு
உளந் திருந்துவதே உயரிய நெறியாம்,
அருங்கலை விநோதர் அண்ணங்க ரார்யரின்
பேசுறு திவ்யப்ரபந்த தீபிகையுரை
மலையி லிட்ட விளக்கென மன்னுக,
தெய்வச் செந்தமிழ் செழித்தினி தோங்குக.

செந்தமிழன்னைக்கு உயிர் நிலையாய் விளங்கும் தொல்காப்பியம், திருக்குறள், கோவையார் போன்ற நூல்களின் உரையாசிரியர்கள், தமிழிலக்கணப் பயிற்சியோடு நில்லாது, வடமொழியிலக்கணம் தருக்கம் முதலான பல கலைகளையும் ஆய்ந்துணர்ந்த பின்னரே உலகுவக்க உரைவரைந்தருளினார்கள். சொல்லதிகார உரையாசிரியர் சேனாவரையரும் 'வடமொழிக்கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரையர்' என்று சிறப்பிக்கப்பெறுவர். இருமொழிகளிலும் பயிற்சியின்றித் தமிழ் நூல்கட்கு உரைவரைந்த ஆசிரியர் யாரும் இலர்.

திவ்யப்ரபந்தங்கட்கு உரைவரைந்த பூர்வாசாரியர்களும் வடமொழி தென்மொழிக் கடல்களிலே ஆழ்ந்து ஆழ்ந்து அரும்பொருள் கண்ட ஆற்றல் வாய்ந்தவர்கள். அவர்கள உபகரித்தருளின பேருரைகளின் பெற்றிகண்டு தண்டமிழ்ப் புலவர் நெக்கு நெக்கு நீராய் உருகுவர்.

மஹாமஹோபாத்யாய உ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பித்த நூல்களில் பல இடங்களிலும் அடிக்குறிப்பில் "பூர்வாசார்யர் இவ்வாறுபொருள் கூறினர்" என மனங்கனிந்து வெளியிட்டிருப்பதைத் தமிழுலகம் நன்குணரும்.

உதாரணமாக 'அவரைவான்புழுக்கு அட்டி' என்ற (பெரும்பாணாற்றுப்படை 195) அடியில் 'புழுக்கு கும்மாயமுமாம்' என்ற இடத்து அடிக்குறிப்பில் 'கும்மாயத்தொடு வெண்ணெய்விழுங்கி' (திவ். பெரி. 3. 3. 3.) என்பதில் கும்மாயம் என்பதற்கு ஸ்ரீ மணவாள மாமுனிகள் குழையச் சமைத்த பருப்பு என்று பொருள் செய்திருக்கின்றனர்" என்று விளக்கியிருக்கின்றார்கள்.

பல்கலைப்புலவராய் விளங்கிய செல்வ கேசவராய முதலியார், M. A., அவர்கள் எழுதிய தமிழ் வியாசங்கள் என்னும் நூலில் (பக். 134). செய்யுள் என்ற கட்டுரையில் 'உபாசனா மூர்த்தியின் அருளாலே பாடல்கள் புறப்படுகின்றன' என்பதை நிரூபிக்கும்போது, திருவாய்மொழியின் வியாக்கியான அவதாரிகையில், 'பகவத் ஸ்வரூப ரூபகுண விபூதிகளை என்பது தொடங்கி இப்பாபந்தங்களுக்கு இவற்றில் கூடாததில்லை' என்பது காறும் உள்ள செஞ்சொற்றொடர்களையே எடுத்துக்காட்டி விளக்கியிருக்கின்றார்கள்.

இவ்வாறு அந்நாள் தொடங்கி இந்நாள் வரை வேறு பாடின்றித் தமிழகம் முழுமையும் பொன்னேபோற் போற்றி வருகின்ற பெரியார் உரைகளை 'தமிழ் மரபு அறியாதவர் உரை' என்றும், 'அந்தணர் தமக்கென ஆக்கிக்கொண்ட உரை' என்றும் ஆய்வுரைச் சுவடிவரைந்தார் ஒருவர் நாக்கூசாது கூறவும் முற்பட்டனர் அந்தோ! ஈதென்னபாவம்!

பெரியோர்கள் இட்டருளின விரிவுரைகளை ஆசான் பக்கல் அடிபணிந்து கேட்கப் பெற்றவர்களே உரையாசிரியர்கள் கூறும் பல வகைப்பொருளும் ஒன்றிய இணைந்து செல்லுமழகைக்கண்டு உருகாநிற்பர் உதாரணமாக 'காரணி கற்பகம்' என்ற திருக்கோவையாருக்கு 'வேண்டாமைக் கொடுத்தலிற் கார், வேண்டக்கொடுத்தலிற் கற்பகம்' என்று பேராசிரியர் இட்ட உரையும், 'தருமானமழை முகிலை' என்ற பெரிய திருமொழிப்பாசுரத்துக்கு "அபேக்ஷிதர்க்கு அபேக்ஷிதங்களைக் கொடுக்கக் கடவதாயிருந்துள்ள கற்பகத் தருப்போலவும், அபேக்ஷாநிரபேக்ஷமாகக் கொடுக்கக்கடவதான பெரியமேகம்போலவுமானவனை" என்று பெரிய வாச்சான் பிள்ளை பணித்தருளிய வியாக்யானமும் ஒருசேரக் கண்டு இன்புறுவதன்றோ நம் தலையாய கடன்

மேலும் சைவ வைணவத்தமிழ்ப் புலவர்கள் யாவரும் திவ்யப்ரபந்த வியாக்யானங்களின் பெருமைநோக்கி அன்னோர் விளக்கியருளும் வகையும் பொருள் காணுமுறையுமொப்பவே, தமிழ் மரபு கெடாது சீரிய நூல்கட்கு உரைவரைந்தும் வருகின்றார்கள்.

இன்னோரன்ன பெருமைவாய்ந்த பூர்வாசாரியர்களையும், 'திவ்யார்த்த தீபிகை' எனனும் பேருரையை வெளியிட்டருளி திவ்யப்ரபந்தப் பேராசிரியராய் வீற்றிருந்தருளும் ஸ்ரீமத் P B A. சுவாமிகளையும் மனம் போனவாறு தூஷிக்க முற்பட்ட தூஷணச் சுவடியை நல்லறிஞர் தொடவும் கூசுவர்!

போற்றினர்கள் வழிவழியே கண்ட பாடமாக ஓதி வந்த சிறப்பும் உரையாசிரியர்களின் சுவை நலம் பொதுளிய உரைச் சிறப்பும் காண உணர்வின்றி ஆழ்வார்களின் அருட்பாசுரங்களையே திருத்திய பாதகம் பெரிது பெரிது! 'தற்கால உரை

யாசிரியர் மருள்கொண்டுரைத்தார்' என்று தாமே மருள் கொண்டு, கேட்போர் செவிசுடு கீழ்மைச்சொற்களாற் சுவடியை நிரப்பியிருக்கின்றார்.

ஆய்வுரைச் சுவடியின் அபத்த பாடங்களை அறவே அகற்றி மக்கள் உள்ளம் தெளிவுபெறும் வகையில் ஸ்ரீமத் காஞ்சீ ஸ்வாமிகள் 'நான்கண்ட நல்லது' என்று ஓர் அருமையான நூலை வழங்கியிருக்கின்றார்கள்.

பூர்வாசாரியர்கள் பணித்த பொருள்கள் இலக்கணத் தானத்தில் எடுத்துக்காட்டப் பெற்றுப் பேரறிஞர்கள் தொகுத்த லெக்ஸிகன் கோசத்திலும் ஏறி நின்றமையை விசதமாக விளக்கியுள்ளார்கள்.

'உன்னையும் உம்பியையும் தொழுதேன்' என்ற இடத்துப் பெரியார் பணித்த உரைச் சிறப்பும் "மாமனும் மருகனும் போலுமன்பின, காமனும் சாமனும் கலந்த காட்சிய" (நாமகள் 43) என்ற சிந்தாமணிப் பாடலும் ஒரு சிறிதும் உணராது, முன்னோர் கொண்ட பாடமும் கூறியபொருளும் பிழையுடையன என்று அபத்தபாடம் கூசாது கூறினவர், நான்கண்ட நல்லதில் இதுபற்றி விளக்கிக் கூறியவற்றை உணர்ந்தேனும் நல்லறிவு பெறுவாராக!

முத்தம், எல்லில், அம்மணம், மசுமையிலீ, இட்டீறு, நாழும், அஞ்சலோதி, நம்பி, முதலிய சொற்களின் உண்மைப் பொருளும் நயமும் யாரும் மறுக்க இயலாத வகையில் அமைந்துகிடப்பதை விளக்கியிருக்கின்றார்கள் ஸ்ரீமத் சுவாமிகள். அவற்றுள் முத்தம் என்ற சொற்பொருளாராய்ச்சியில் ஆய்வுரைச் சுவடியார் முன்பின் பாடற்றொடர்பையுஞ் சிறிதும் அறியாது மனம் போனபடி பொருள் எழுதுபவர் என்பதும் தேற நின்றது.

ஆய்வுரைச் சுவடியில் ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்களைத் தூஷித்திருப்பது எல்லைகடந்ததொன்று. இத்தகைய இழிவுரைகள் மலிந்த சுவடியைப்பற்றி, தம் கருத்துக்களை வரையத் தொடங்கிய ஸ்ரீமத் காஞ்சீஸ்வாமிகள் அவர்கள் தாம் கொண்ட பாடத்தின் ஏற்றம், உண்மைப் பொருட் சிறப்பு இவைமட்டும் விளக்கினார்களே அன்றி வேறு யாதொரு தூஷணமும் செய்தார்களில்லை.

" தம்மையிகழ்ந்தமை தாம் பொறுப்பதன்றி மற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்,—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல்? என்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன் "

என்ற நாலடிச் செய்யுள் காட்டும் நெறியில் நிற்பவர்கள் ஆதலின் அவர்கள் நீர்மை உலகறிந்து போற்றத்தக்க தொன்றாம்.

'நான்கண்ட நல்லது, 'திவ்யார்த்த தீபிகைச் சிறப்பு', 'பெருமையும் பொறுமையும்' என்ற இந்நூல்களை ஆய்வுரைச் சுவடியார் எழுத்தெண்ணிப் பயின்று, பின்பேனும் நல்லறிவு கைவரப்பெற்று, உலகம் போற்றும் உரையாசிரியர்களைப் பழிப்பது விடுத்து, ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோராக வாழ எல்லாம்வல்ல இறைவன் அருள்க.

" தெய்வச் செந்தமிழ் செழித்தினி தோங்குக
திவ்யப்ரபந்த தீபிகை ஒளிர்க ".

இங்ஙனம்:

**முத்து வேங்கடாசலமையர்.**

(மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பரீக்ஷகர்)

# ஓர் குதூஹல ஈடுபாடு

கீதாரத்னம் ஸ்ரீ. நல்லப்பா ஜீயப்பங்கார், B. A.

ஸ்ரீ காஞ்சிபுரம் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி உ. வே. மஹாவித்வான், உபந்யாஸகேஸரி ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியிடம் அனேக வருஷங்களாக நெருங்கிப்பழகும் பாக்யத்தைப் பெற்றவர்களில் அடியேன் ஒருவன், இம்மாதிரியே தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தையும் வடவாசார்ய ஸம்ப்ரதாயத்தையும் சேர்ந்த அனேக மஹான்களுடனும் நெருங்கிப்பழகும் பாக்யம் அடியேனுக்குண்டு. இந்த ஸ்வாமி எல்லா வித்வான்களுக்கும் மேல் உயர்ந்த சிகரமாய் விளங்குபவர் என்பதை வித்வான்களோடு பாமரர்களோடு வாசியற எல்லோரும் ஒப்புக்கொண்டுள்ளனர். "வேதம், உபநிஷத், இதிஹாஸபுராணங்கள், ஆழ்வார்களின் திவ்ய ப்ரபந்தங்கள், பூர்வாசார்யர்களின் ஸ்தோத்ராதி ஸகல ஸ்ரீஸூக்திகள், ரஹஸ்யங்கள், வியாக்யானங்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து திரண்டு உருவெடுத்திருக்கும் ஓர் அபூர்வ வ்யக்தியல்லவோ இவர்" என்று (காலஞ்சென்ற) மயிலாபூர் ப்ரபல வக்கீல் ஸ்ரீ. உ. வே. கோபாலஸ்வாமி ஐயங்கார் அடிக்கடி அடியேனிடம் சொல்லிக் கொண்டாடுவது வழக்கம். அந்த வக்கீல் ஸ்வாமி *சைவம் கற்றோம் சமணம் கற்றோம் என்கிற கணக்கில், மேல்நாட்டுத் தத்வ விஷயமானாலும் சரி, நம்முடைய பரந்த ஹிந்து மத விஷயமானாலும் சரி, அவர் பார்த்திராத க்ரந்தமும் கிடையாது, கேட்டிராத வித்வானும் கிடையாது. அவரிடத்தில் சில நுண்ணிய விஷயங்களையறியச் சில பெரிய வித்வான்களும் நாடினதை அடியேன் கண்டிருக்கிறேன். அவர் மதராஸில் ஸ்ரீ ஸ்வாமியின் உபந்யாஸமென்றால் அரை மணி முன்பாகவே சில நண்பர்களுடன் வந்து காத்துக்கொண்டிருப்பது வழக்கம். இவ்வளவு வ்ருத்தாப்யத்திலும் இந்த ச்ரம மேதுக்கென்று ஒரு நாள் தொண்டைமண்டல சபைவாசலில் அடியேன் ப்ரஸ்தாபித்தபோது "அடா, நீயும் என்ன இப்படிக்கேட்கிறாயே? வியாசர், பராசரர், வால்மீகி முதலிய ரிஷிகளென்ன, பொய்கையார், பூதத்தார், பேயார், நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்களென்ன, ஸ்ரீமந்நாதமுனிகள், ஆளவந்தார், இராமா

பிருத பூஷிதராய ஸகல பூர்வாசார்ய திவ்யகாந்த திவ்யார்த்த விசதீகரண ஸமர்த்தராய விளங்கும் ஸ்ரீகாஞ்சி அண்ணங்கராசார்யஸ்வாமியின் ஸகல ஸ்ரீஸூக்திகளையும் அம்ருதமாகப் பானம் பண்ணுமவர்களில் அடியேன் ஒருவன். ஸ்ரீ ஸ்வாமி ஸாதித்தருளின ஸகலக்ரந்தங்களுக்குள்ளும் திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை முதலான ஸாரதராய க்ரந்தங்களைப் பூர்த்தியாகப் பலதடவை ஸேவித்து மிகவும் ஸந்தோஷமடைந்து கொண்டிருக்கிறேன். எவ்வளவு புத்தி ச்ரமம்! எவ்வளவு த்ரவ்ய ச்ரமம்! எவ்வளவு தேஹ ச்ரமம்! மற்றும் பலவகை சிரமங்களையும் சிறிதும் பாராட்டாமல் முமுக்ஷுக்களுக்கும் மற்றவர்களுக்கும் வேண்டிய ஸகல க்ரந்தங்களையும் பண்டிதர்களும் பாமரர்களும் எளிதாகப் புரிந்து கொண்டு ஸந்தோஷ லாபமடையும்படியாக ஸ்வாமி எழுதி வெளியிட்டிருக்கிற மஹோபகாரத்திற்கு அடியேன் போலவர் என்ன கைம்மாறு செய்யக்கூடும்? ஒன்றுமே யில்லை. ஆனாலும் ஸ்வாமிக்கு ஒரு திருநாமம் சாத்தி அந்தத் திருநாமத்தைக்கொண்டே எல்லாரும் அழைக்கும்படி செய்ய வேண்டும் என்று ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அடியேன் மனதில் புகுந்து இதையெழுதி உலகுக்குத் தெரிவிக்கும்படி நியமித்தபடியால்

பூர்வாசார்ய ஸமுதாயாவதாரர்

என்கிற விருதை அடியேன் ஸ்ரீஸ்வாமிக்குச் சூட்டுகின்றேன். இனி எல்லாரும் இந்தத் திருநாமமிட்டழைத்தே ஸ்வாமியைத் தெண்டன் ஸமர்ப்பிக்க வேணுமென்றும் ப்ரார்த்திக்கிறேன்.

திவ்யப்ரபந்தங்களுக்குப் பூர்வாசார்ய வ்யாக்கியானங்கள் பலவிடங்களில் புரியாமலிருப்பதையும் ஐதிஹ்யங்கள் விளங்காமலிருப்பதையும் இதிஹாஸங்கள் தெரியாமலிருப்பதையும் மிகவும் ஸ்பஷ்டமாக விளக்கியும் அவரவர்களுக்கு உண்டாகக்கூடிய அநேக ஸந்தேஹங்களைப் போக்கியும் ஸ்வாமியின் திவ்யார்த்த தீபிகையுரை அமைந்திருக்குமழகு அஸூயையற்றவர்களால் மிகவும் ஸந்தோஷிக்கத்தக்கது. இப்படியே இன்னும் பூர்வாசார்ய க்ரந்தங்களை யெல்லாம்

திருப்பர் என்பதும் பால்யம்முதல் இவருடன்கூடவே பழகிவரும் அந்தரங்கர்களுக்கும் தெரியாது. இவருடைய ஞாபகசக்தி கூரத்தாழ்வானையே நமக்கு நினைவூட்டும். எழுதியதை மறுபடியும் திருத்துவது என்பதும் ஸ்வாமியிடம்கிடையாது. எழுதியவுடனே கற்றைகற்றையாக மடித்து அப்படியே அச்சாபீசுக்கு அனுப்பிவிடுவர். அவைகளில் ஒருவரியிலாவது ஒருகுறில் நெடில்கூட விடுபட்டிராது. ஓரிடத்திலும் ஒரெழுத்தும் அடிபட்டுமிராது. ஸ்வாமி அச்சுப்பிழைகளைத்திருத்தும் (Proof Correction) தன்மையை நாம் காசுகொடுத்துப் பார்க்கவேண்டும். சாதாரணமாக எல்லாரும் ஆரம்பம் முதல் வரிவரியாக வல்லவோ பிழைகளைக்கண்டு திருத்துவது வழக்கம். ஸ்வாமியிடம் இந்த ரீதிகிடையாது. பிழைகள் ஸ்வாமிகண்முன் 'என்னைக்கொள், என்னைக்கொள்' என்று கீழது மேலாகவும் மேலது கீழாகவும் தோன்றி ஒரு நொடிப்பொழுதில் ஒன்றுகூட விடாமல் அடிபட்டுப்போவது வழக்கம். இத்தகைய சக்தியில்லாவிடில் இவருடைய பெரியபெரிய க்ரந்தமாலைகளானவை, இவர் இயற்றிவரும் மற்ற நூற்றுக்கணக்கான க்ரந்தங்களின் நடுவிலும், இவர் தேசமெங்கும் அடிக்கடி சுற்றிச் செய்துவரும் உபன்யாஸங்களின் மத்தியிலும், இவர் ஆற்றிவரும் மற்ற அனேகபணிகளின் இடையிலும் எப்படி இரண்டு மூன்று வருஷங்களுக்குள் வெளியாகி ஸ்ரீவைஷ்ணவவுலகம் குதூஹலிக்க முடியும்?

ஸ்ரீஸ்வாமியிடம் அடியேன் கண்ட மற்றோர் அதிசயத்தையும் இங்குப் பிரஸ்தாபிக்கிறேன். இவருக்கு ஞானாசாரியராகவிருந்த உலகம் நிறைந்த புகழாளரான ஜகத்குரு ஸ்ரீ அனந்தாசாரிய ஸ்வாமியிடம் தற்காலத்திய ஆரோக்ய சாஸ்திரத்திற்கனுகுணமாய்ச் சில கடுமையான ஆஹார நியதிகளும் உயர்ந்த தேஹாப்யாஸ முறைகளும் இருந்தன. இவரிடமோ, ப்ராதக்கால அனுட்டானம் த்வாதச ஊர்த்வபுண்ட்ர தாரணம் முதலிய நம் பூருவர்களின் ஆசாரங்களைத் தவிர, நவீனமுறையில் ஆரோக்யத்தைக் காக்கும்படியான (பானாதிகள் என்று சொல்லக் கூடியவை உள்பட) எவ்வித பழக்கவழக்கமும் புகுந்ததில்லை. தமது சொந்த க்ருஹத்திலே யானாலும் சரி, வேறு இடங்களிலே யானாலும் சரி,

சில ஆங்கிலப் பத்திரிகைகளும், பல தமிழ்ப் பத்திரிகைகளும் உண்மையைச் சிறிதும் மறைக்காமல் உள்ளவாறு தெரிவித்திருக்கின்றன. அவை உலகமெங்கும் பரவியிருப்பதனால் நாம் தனிப்படத் தெரிவிக்க அவசியமில்லையென நினைக்கிறோம்.

திவ்வியப்பிரபந்தங்களைப் பற்றியாவது அவற்றின் வியாக்கியானங்களைப் பற்றியாவது ஆராய்ச்சி செய்ய எழுவதற்கு முதலியார் சிறிதும் உரிமைவாய்ந்தவரல்லர் என்பதை உலகமெல்லாம் இசையவும் அவர் தாமும் இணங்கவும் முதலில் சுருக்கமாகத் தெரிவிக்கிறோம்.

வைணவ ஆசிரியர்களுள் வியாக்கியான கர்த்தர்களாக மிக்க பெரும் புகழ் படைத்தவர்கள் இருவர்—பெரியவாச்சான் பிள்ளையும், மணவாளமாமுனிகளும். இவர்களுள் பெரியவாச்சான் பிள்ளை என்பவர் மணவாளமாமுனிகள் திருவவதாரம் செய்வதற்கு முந்தியே திருநாடு சென்றவர். இது உலகமறிந்த உண்மை. அப்பெரியவாச்சான்பிள்ளை ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களுக்கு வியாக்கியானம் இயற்றினாரேயன்றி மணவாளமாமுனிகளியற்றிய நூல்களுக்கு வியாக்கியானமெழுதியவரல்லர். மிகமுற்பட்டவரான அவர் பிற்பட்ட நூலுக்கு உரையெழுதப்பிரசக்தியேயில்லையென்பது சொல்லவும் வேண்டுமோ? நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியாயிரத்தின் சாரப்பொருள்களைத் தொகுத்து மணவாளமாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியென்னுமொரு சிறந்த பிரபந்தத்தை வெண்பாவிற் பாடியுள்ளார். அதற்குப் பெரிய வாச்சான்பிள்ளையெனுமாசிரியர் உரைசெய்ய பிரசக்தியேகிடையாது. அந்தநூற்றந்தாதி நூல் தோன்றுவதற்கு நூற்றாண்டுகட்குமுந்தியே விண்ணுலகமெய்திய பெரியவாச்சான் பிள்ளை அதற்கு உரையாசிரியராக அமையமுடியாதன்றோ. அதற்கு ஸ்ரீ அண்ணங்கராசாரியார் ஸ்வாமிகள் உரையெழுதியுள்ளார் முதன் முதலாக, நானூறுவருடங்களுக்கு முற்பட்ட சீயரொருவரும் ஒருரை வகுத்துள்ளார். இவ்வளவே உண்மையாயிருக்க, முதலியார் போட்டிருக்கிற ஆகாயப் பந்தல்களை அந்தோ! என்னென்பது. கேண்மின்;

திருவாய்மொழி நூற்றந்தாதியின் 85-ம் பாட்டாகிய “இன்னுயிர்மால் தோற்றினது” என்னும் பாட்டின் ஈற்றடி

கிழ் வைத்தெடுத்ததும் அடியேனைத் தூக்கிவாரிப்போட்டது. டிக்ரி 196!
இன்னும் ½ அல்லது 1 டிக்ரி ஏறினால், வைத்திய சாஸ்திரத்தின்படி, மூளை
கொதித்து ரத்தக்குழாய்கள் வெடிக்க ஆரம்பிக்கவேண்டும். ஸ்வாமிக்கு
ஞாபகம் இருப்பதும் இராததுமான நிலை. இத்தருவாயிலும் ஸ்வாமிக்குக்
கோஷ்டியில் அன்வயிக்கும் அவா விட்டபாடில்லை. தம்மையுமறியாமல்
தேஹம் கிளம்புகிறது, திருவடிகள் நடக்க முயல்கின்றன. ஆனாலும் ஐந்
தாறு பேர்களின் உதவியைக்கொண்டு ஸ்வாமியைக் கட்டியணைத்து மறு
படியும் வண்டியேற்றி க்ருஹத்திற்குக் கொண்டு சேர்த்தோம். மறுநாள்
மதராஸில் நடக்கவேண்டியிருந்த உபன்யாஸத்தை நிறுத்தத் தந்திகொடுக்
கப்பட்டது. சிரஸில் ஐஸ் லவத்துக்கட்டி தகுந்த மருந்துகளையும் கொடுத்து
ஜுரம் 104க்கு இறங்கியபின், அடியேன் குடிசைக்கு விடைகொண்டேன்.
அப்போது இரவு மணி 12. மறுநாட்காலை ஸ்வாமியின் தேஹம் எப்படி
யிருக்கிறதோவென்று மிகுந்த விசாரமுடன் ஸ்வாமியின் திருமாளிகைக்
குள் நுழைந்ததும் அங்கிருந்தவர்கள் "ஸ்வாமி மதராஸ் எழுந்தருளியாச்சு"
என்று சொன்னதை நம்பமுடியவில்லை. ஸ்வாமி விஷயத்தில் வைத்திய
சாஸ்திரம் தவிடுபொடியென்று சொல்லிக்கொண்டே அடியேன் குடிசைக்
குத் திரும்பினேன். இத்தகைய சந்தர்ப்பங்களில்தான் ஸ்வாமி என்ன
எம்பெருமானின் சக்தி விசேஷமோ, ஆழ்வாரின் ஆவேசமோ, எம்பெரு
மானாரின் தவப்பயனோ, நம்பிள்ளையின் புனரவதாரமோ என்கிற எண்
ணங்கள் மனதில் வலிதாகக் கிளம்பும். கதாசித் ஸ்வாமிக்குத் திருமேனி
பாங்கில்லை என்பார்கள்; ஆனால் ஸ்வாமி முப்பது வருஷகாலமாக ஸ்ரீ
காஞ்சியில் நித்திய க்ருத்யமாக நிர்வஹித்துவரும் ப்ராதக்கால ப்ரதக்ஷிண
வேத கோஷ்டியிலிருந்து அன்றை மறுநாட்காலையே ஸ்வாமியின் கம்பீர
மான கண்டத்வனி, யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே
என்பதைப்போல், இரண்டு பர்லாங்குக்குமுன் ஊடுருவிச்சென்று அங்கு
உறங்குகிறவர்களைக் கிளப்பும்.

ஸ்ரீ ஸ்வாமியின் பகவத் விஷய காலக்ஷேப நிர்வாஹமோ வாசாமகோசரம். இவருக்கு முன் சில வித்வான்கள் "பகவத் விஷயம்" என்கிற
விருதைத் தங்கள் பெயர்கள்முன் கூட்டிக்கொண்டிருந்திருக்கிறார்கள்,

அவர்களில் இரண்டொருவரிடம் அடியேன் அனேக பாசுரார்த்தங்களைக் கேட்டதுண்டு. அவர்கள் ஸ்ரீ ஸ்வாமியின் பகவத்விஷய காலக்ஷேபத்தில் இரண்டொரு நாட்களாவது அன்வயிக்கப்பெற்றிருந்தால், அருளாளப் பெருமாளெம்பெருமானார் எம்பெருமானாரிடம் ஈடுபட்டதுபோலவும், நஞ்சீயர் பட்டரிடம் ஈடுபட்டதுபோலவும் ஸ்வாமியிடம் அவர்கள் ஈடு பட்டிருப்பார்கள் என்பது நிச்சயம். விஷயமோ பகவத்விஷயம்; பாசுரங்களோ பராங்குசருடையவை; "ஸஹஸ்ர சாகோபநிஷத் ஸமாகமம்", "த்ராவிட வேதஸாகரம்" என்கிற ப்ரஸித்தியைப் பெற்றவை; இதற்கு வியாக்கியானம் சாதித்தவரோ ஸகல கலாவல்லபரான நம்பிள்ளை; இதைப் பட்டோலை கொண்டருளிய காலமோ 600 வருஷங்களுக்கு முற்பட்டது; இதில் அரும்பதஉரைகாரர்களென்று கீர்த்திபெற்றவர்கள்கூட அனேக விடங்களில் இடம்வலம் தெரியாமல் திகைத்திருக்கிறார்கள். இத்தகைய ரத்னாகரத்திற்குள் ஸ்ரீ ஸ்வாமி நம்மை அழைத்துச்சென்று, "இதோ பாருங்கள், இது முத்து, இது கெம்பு, இது பச்சை, இது நீலம், இதுஒரு சிறந்த கோமேதகம், இது ஓர் உயர்ந்த வைடூர்யம், இது ஒரு விலையில்லா மாணிக்கம், இதோ பாருங்கள் ஒரு ஆயிரம்கோடி வைரம்; இன்னமும் பாருங்கள், இதன்பெயர் 'முத்துக் கெம்பு!', இது 'கெம்புப் பச்சை!', இது 'பச்சைநீலம்!', இது 'நீலகோமேதகம்!', இது 'கோமேதக வைடூர்ய வைரம்!', இந்தப்பார்த்தீர்களா? இது ஸ்ரீ கௌஸ்துபத்திற்குச் சமான மான ஓர் *'கெம்பு நீலரத்ன வைரமணி!'; அதோ அந்த ஆச்சரியத்தைப் பாருங்கள் 'நீரிலே நெருப்பு!' அதன்பக்கத்திலேயே பாருங்கள் 'நெருப் பிலே நீர்!' என்றென்று, அன்று அர்ஜுனனுக்கு ஸ்ரீ க்ருஷ்ணன் காட் டிய விச்வரூபத்தைப்போல், பகவத் பாகவதகுணங்களைத் தம்முடைய நிரங்குச ஞானஒளியைக்கொண்டு வீசியும், நிகரற்ற மிகக் கூர்மையான ஆராய்ச்சிவல்லமையைச் செலுத்தியும், நாமெல்லாம் மயிர்க்கூச்செறி வுடன் ஆனந்தப்பட்டும், *நினைந்து நைந்து உள் கரைந்துருகியும் ஈடுபடும் படி பிரகாசிப்பித்து நம்மைக் குதூஹலப் படுத்துகிறார்.

ரூபாய் ஐம்பதும் நூறுமான டிக்கெட் வாங்கிக் கேட்கவேண்டிய சில சிறந்த கோகிலகான சங்கீதக் கச்சேரிகளையும் அடியேன் கேட்ட

துண்டு; உலகிற் சிறந்த சிலபெரிய ஸர்க்கஸ், ஜாலவித்தை, எக்ஸிபிஷன் முதலிய அற்புதக் கண்காட்சிகளையும் கண்டதுண்டு. உலகப்பிரஸித்தமான சில அரிய சொற்பொழிவுகளையும் ஆங்கிலத்தில் கேட்டதுண்டு. சமீப காலத்தில் உலகிலேயே முதல்தரமான பேசும்படம் என்று அனேக தங்க மெடல்கள் அளிக்கப்பெற்ற ஷேக்ஸ்பியரின் 'ஆமலதன்' (Hamlet) உள்பட சில உயர்ந்த ஸினிமாக்களையும் பார்த்ததுண்டு. ஆனல் இவை யொன்றிலும் நம் ஸ்வாமியின் பகவத்விஷய காலக்ஷேபத்தில் உண்டாகுமனுபவங்களில் பதினயிரத்தில் ஒருபங்குகூட உண்டாகாதென்று திண்ணமாய் ஆணையிட்டுச் சொல்வேன். "பக்தாம்ருதம்", "விச்வஜனனு மோதனம்" என்று நித்யஸூரிகளும், இன்னும் அப்படியே ஸர்வேச்வரனும் மண்டி ஈடுபடும் படியல்லவோ நம் சடகோபரின் பாசுரங்கள் அமைந்திருக்கின்றன. இவைகளின் அர்த்த விசேஷங்களை நமது பூர்வாசார்யர்கள், ஸ்திரீ பாலர்களும் ஈடுபடும்படி, ஸகல சுவைகளையும் வெகு அற்புதமாக அமைத்தல்லவோ நமக்குக் காட்டியுள்ளனர். இவைகளில் தலைசிறந்ததல்லவோ நம்பிள்ளையின் "ஈடு"; இதன் ஆழ்பொருள்களை நம் ஸ்வாமியிடத்திலல்லவோ நாம்கேட்டு, ஈடுபட்டு ஆனந்திக்கவேண்டும். இந்த மாபெரும்பாக்யத்தை அடியேன்போல்வார் ★ காஞ்சிபுரத்தில் நம்பிள்ளை ஸந்நிதியில் தினப்படியாக அனுபவித்துவர ப்ராப்தமாயிருப்பதுதான் இந்த குதூகல ஈடுபாட்டுக்கு மூலகாரணமாயமைந்தது.

ஸ்ரீ ஸ்வாமியின் பகவத்விஷய காலக்ஷேபத்தில், ஒவ்வோரிடத்தில் "இத்தகைய வியாக்யானம் நம்பிள்ளையைத்தவிர வேறு எவராலும் சாதித்திருக்கமுடியாது" என்கிற உணர்ச்சியும் "இதை ஸ்ரீ ஸ்வாமியைத் தவிர வேறு எவராலும் அறிந்து இப்படிப் பாமரர்க்கும் நன்ருகப் புரியுமாறு விளக்கமுடியாது" என்கிற மகிழ்ச்சியும், பெரிய வித்வான்களுக்கும், வாய்வெருவும்படி உண்டாவது ப்ரதிதின அனுபவம். ஸகல சாஸ்திரங்களிலேயும் ஸ்ரீ ஸ்வாமிக்கிருக்கும் ஞானம் ஒருவிதத்திலேயும் நம்பிள்ளையின் ஞானத்தைவிடக் குறைந்ததன்று என்கிற உணர்ச்சியும் அநேக தடவைகளில் உண்டாகும். அடியேன் முதலில் ப்ரஸ்தாபித்த மயிலாபூர் ஸ்ரீ.

ந,

உ. வே. கோபாலஸ்வாமி ஐயங்கார் சொல்லியபடி வேதம், உபநிஷத், இதிஹாஸபுராணங்கள், திவ்யப்ரபந்தங்கள், ஸ்தோத்திரபாடங்கள், ரஹஸ்யங்கள் இவை யெல்லாவற்றிற்கும் நம் பூர்வாசார்யர்களிட்டிருக்கும் அற்புத வியாக்யானங்கள் இவையெல்லாவற்றையும் கரைத்துக்குடித்து, கூரத்தாழ்வானுடைய ஞாபகசக்தியும் வாய்க்கப்பெற்று, தர்க்க வியாகரண மீமாம்சை முதலிய ஸகல சாஸ்திரங்களிலேயும், காவிய நாடகாதி ஸகல ஸாஹித்யங்களிலேயும் பரிபூர்ண பாண்டித்யமும் பெற்றிருந்தாலொழிய பகவத் விஷய காலக்ஷேபத்தைக் குறைவற நிர்வஹிக்க முடியாது; இவைகளில் ஒன்று குறைந்திருந்தாலும் இந்த காலக்ஷேபத்திற்குச் சோபை குன்றியே தீரும். இவையெல்லாம் ஸ்ரீ ஸ்வாமியிடத்தில் புஷ்கலங்களாய் இருப்பதைப்போல் வேறு எந்த வித்வானிடத்தில் காணமுடியும்?

ஐந்தாறு நூற்றாண்டுகளுக்கொருமுறை அவதரிக்கும் மஹாசார்ய கோஷ்டியைச்சேர்ந்தவர் நம் ஸ்வாமி. இவருடைய காலத்தில் நாம் பிறந்திருந்து இவருடைய க்ருபா கடாக்ஷத்திற்கும இலக்காயிருப்பது பெருதற்குரிய பாக்யமே. நாம் உடையவர் காலத்தில் பிறந்திருக்கவில்லையே! நம்பிள்ளையின் கோஷ்டியில் அன்வயிக்கக் கொடுத்துவைத்திருக்கவில்லையே! என்கிற இழவுதீர எம்பெருமான் ஸ்ரீ ஸ்வாமியை நமக்கு அனுக்ரஹித்திருக்கிறன். இப்படியே இவர்தம் அளவிலாப் பெருமைகளுடனும், குறையிலாச் சிஷ்யவர்க்கங்களுடனும் இவ்விபூதியில் பல்லாண்டு பல்லாண்டாய் எழுந்தருளியிருந்து, உலகம் உய்ய, நாம் உய்ய, பக்த பரம்பரைகள் உய்ய,தம்முடைய பணிகளை மேன்மேலும் பெருக்கிக்கொண்டிருக்குமாறு அனுக்ரஹிக்க எம்பெருமானை ப்ரார்த்தித்து அடியேனுடைய இச்சிறிய குதூஹல ஈடுபாட்டிற்குத் தற்சமயம் முற்றுப்புள்ளி கொடுக்கிறேன்.




★ ஸ்ரீ ஜீயப்பங்கார் ஸ்ரீ அஞ்சி மதோக்த்க்ரி ஸன்னிதி கார்யகர்த்தா